[with bees humming about it, taking it to be a lotus]. May those auspicious marks give us all things of joy.

यस्मादाक्रामतो द्यां गरुडमणिशिलाकेतुदण्डायमानात्
आश्च्योतन्ती बभासे सुरसरिदमला वैजयन्तीव कान्ता ।
भूमिष्ठो यस्तथाऽन्यो भुवनगृहबृहत्स्तम्भशोभां दधौ नः
पातामेतौ पयोजोदरललिततलौ पङ्कजाक्षस्य पादौ ॥ १२ ॥

12. யஸ்மாதாக்ராமதோ த்யாம் கருடமணிஶிலாகேதுதண்டாயமானாத்
ஆஶ்ச்யோதந்தீ பபாஸே ஸுரஸரிதமலா வைஜயந்தீவ காந்தா |
பூமிஷ்டோ யஸ்ததா'ன்யோ புவனக்ருஹப்ருஹத்ஸ்தம்ப-
ஶோபாம் ததௌ நஃ
பாதாமேதௌ பயோஜோதரலலிததலௌ பங்கஜாக்ஷஸ்ய
பாதௌ ||

**द्यां** வானத்தை **आक्रामतः** அளப்பதாயும் **गरुडमणिशिला-केतुदण्डायमानात्** (கருடமணி) மாணிக்கக்கல்லாலான த்வஜ ஸ்தம்பமாக விளங்கியதுமான **यस्मात्** எந்த மஹா விஷ்ணுவின் பாதத்தினின்றும் **आश्च्योतन्ती** பெருகுகின்ற **अमला सुरसरित्** பரிசுத்தமான தேவநதியாகிய கங்கை **वैजयन्ती इव** த்வஜபடம்போலவும் பகவானுடைய திருமார்பிலே தவழும் வைஜயந்தி என்னும் மாலைபோலவும் **कान्ता बभासे** மனதைக் கவரும் அழகுவாய்ந்தவளாய் விளங்கினளோ, **तथा** அவ்வாறே **भूमिष्ठः अन्यः यः** பூமியிலே ஊன்றிய எந்த மற்றொரு பாதமானது **भुवनगृहबृहत्स्तम्भशोभां दधौ** உலகமாகிய மாளிகைக்குப் பெருந்தூணாக விளங்கும் அழகைப் பெற்றதோ, **एतौ** (அத்தகைய) இவ்விரண்டு **पयोजोदर-ललिततलौ** தாமரை யகவாயிலுள்ள இதழ்களைப்போன்று மென்மையும் அழகும் வாய்ந்த அடிப்புறங்களையுடைய **पङ्कजाक्षस्य पादौ** தாமரைக்கண்ணனின் திருப்பாதங்கள் **नः पाताम्** நம்மைப் பாதுகாப்பனவாக.

தாமரையின் அகவிதழ்போல் மென்மையும் அழகும் வாய்ந்தவை தாமரைக் கண்ணனுடைய திருவடித்தலங்கள்;

அந்தத் திருவடிகளில் ஒன்று திரிவிக்கிரமாவதாரகாலத்திலே வானை அளந்துகொண்டு வெற்றிக்கு அடையாளமாக நாட்டிய மரகதமயமான த்வஜஸ்தம்பம்போலே விளங்கிற்று. அப்போது பிரமன் திருவடி கழுவியதால் பரிசுத்தமாகிப் பெருகிய தேவநதியானது அந்த ஜயஸ்தம்பத்திலுள்ள வெண்கொடி போலவும் பகவானுடைய மார்பிலேயுள்ள மாலைபோலவும் விளங்கிற்று. பூமியில் ஊன்றிய பாதமோ, திரிலோகமாகிய குடும்பம் வாழும் வீட்டிற்கு மத்தியிலே யுள்ள பிரதான ஸ்தம்பமாக விளங்கிற்று. பூமியில் ஊன்றியபோதும் வானை அளந்தபோதும் செவ்வி மாறாதிருந்த இவ்வடிகள் நம்மைக் காப்பனவாக.

XII. Flowing down from the foot which measured the sky and appeared like an emerald flag-staff of victory, the celestial stream of the sacred Ganges looked charming like the streaming flag and like Vaijayanti (garland of victory); while the other foot which was planted on the earth shone like the big (central) pillar of the building (Universe) housing the worlds. May these two feet of Vishnu (the Lotus-eyed One) whose soles are soft and lovely, like the inside of the lotus flower, be our saviour.

आक्रामद्भ्यां त्रिलोकीमसुरसुरपती तत्क्षणादेव नीतौ
याभ्यां वैरोचनीन्द्रौ युगपदपि विपत्संपदोरेकधाम ।
ताभ्यां ताम्रोदराभ्यां मुहुरहमजितस्याश्रिताभ्यामुभाभ्यां
प्राज्यैश्वर्यप्रदाभ्यां प्रणतिमुपगतः पादपङ्केरुहाभ्याम् ॥ १३ ॥

13. ஆக்ராமத்ப்யாம் த்ரிலோகி மஸுரஸுரபதி தத்க்ஷணாதேவ நீதௌ
யாப்யாம் வைரோசனீந்த்ரௌ யுகபதபி விபத்ஸம்பதோரேக-
தாம |
தாப்யாம் தாம்ரோதராப்யாம் முஹுரஹமஜிதஸ்யாஞ்சிதாப்யா-
முபாப்யாம்
ப்ராஜ்யைஶ்வர்யப்ரதாப்யாம் ப்ரணதிமுபகதஃ பாதபங்கே-
ருஹாப்யாம் ॥

**त्रिलोकीम् आक्रामद्भ्यां याभ्यां** மூவுலகத்தையும் அளவிடுவதற்கு நீண்ட எந்தத் திருவடிகளால் **तत्क्षणात् एव** அந்த க்ஷணத்திலேயே **युगपत् अपि** ஒருங்கே **असुरसुरपती वैरोचनीन्द्रौ** அசுரர்களுக்குத் தலைவனும் அமரர்களுக்குத் தலைவனுமான பலிச் சக்கிரவர்த்தியும் தேவேந்திரனும் **विपत्संपदोः एकधाम नीतौ** (முறையே) விபத்திற்கும் ஸம்பத்திற்கும் முக்கியமான இடமாகச் செய்யப்பட்டார்களோ, **ताम्रोदराभ्यां** சிவந்த அகவாயையுடையவையும் **अर्चिताभ्यां** (எல்லோராலும்) நன்கு பூஜிக்கப் பெற்றவையும் **प्राज्यैश्वर्यप्रदाभ्यां** அளவற்ற ஐசுவரியத்தை அளிப்பவையுமான **अजितस्य** வெல்லவொண்ணாத பராக்கிரமங்களையுடைய மஹாவிஷ்ணுவின் **ताभ्याम् उभाभ्यां पादपङ्केरुहाभ्यां** அந்தத் திருவடித் தாமரைகள் இரண்டிலும் **अहं** நான் **मुहुः** அடிக்கடி **प्रणतिम् उगपतः** வணங்கிய வண்ணமாய் இருக்கிறேன்.

ஸர்வசக்தி வாய்ந்த பகவானுடைய மூவுலகளந்த திருவடிகள் ஏககாலத்திலே இந்திர பதவியிலிருந்த ஒருவனை மஹாவிபத்திற்கு ஆளாக்கவும் அந்த உயர் பதவியை இழந்தவனுக்கு பழைய ஸம்பத்தினும் மேலான பதவியை அளிக்கவும் செய்தன. பரமைசுவரியத்தைப் பெறுவதற்குத் திருவடிகளிலே ஒருமுறை வணங்கினாற் போதும். அவை மெல்லிய தாமரையிதழ்போன்ற அழகால் என்னை வென்று அடிமை கொண்டனவாதலால் நான் வேறொரு பயனையும் கருதாது அவைகளை வணங்குவதே பயனாக வணங்கியவண்ணமாகவே இருக்கிறேன்.

XIII. Measuring the three worlds, the lotus-feet of Vishnu (the Unconquerable One) made Bali (son of Virochana) and Indra, instantly and simultaneously, the unique abodes of Penury and Plenty (respectively). Their surface glows ruddy. To those two lotus-feet which are worshipped (by everyone) and confer unbounded riches (on them), I constantly make obeisance.

**येभ्यो वर्णश्चतुर्थश्चरमत उदभूदादिसर्गे प्रजानां**
**साहस्री चापि संख्या प्रकटमभिहिता सर्ववेदेषु येषाम्।**
**प्राप्ता विश्वंभरा यैरतिविततनोर्विश्वमूर्तेर्विराजो**
**विष्णोस्तेभ्यो महद्भ्यः सततमपि नमोऽस्त्वङ्घ्रिपङ्केरुहेभ्यः॥ १४**

14. யேப்யோ வர்ணஶ்சதுர்(த்)தஶ்சரமத உதபூதாதிஸர்கே ப்ராஜானும்
ஸாஹஸ்ரீசாபிஸங்க்யா ப்ரகடமபிஹிதா ஸர்வவேதேஷு யேஷாம்।
ப்ராப்தா விஶ்வம்பரா யைரதிவிததததனோர் விஶ்வமூர்(த்)தேர்-
விராஜோ
விஷ்ணோஸ்தேப்யோ மஹத்ப்ய: ஸததமபி நமோ'ஸ்த்வங்க்ரி-
பங்கேருஹேப்ய: ॥

**प्रजानाम् आदिसर्गे** மக்களை முதன்முதலாகப் படைக்கும் போது **येभ्यः** எந்த பாதங்களினின்றும் **चरमतः** (மூன்று வர்ணங்களும் உண்டான பிறகு) கடைசியாக **चतुर्थः वर्णः** நான்காவது வர்ணமானது **उदभूत्** தோன்றிற்றோ, **येषां** எந்த பாதங்களின் **संख्या** எண்ணிக்கையானது **सर्ववेदेषु** எல்லா வேதங்களிலும் **साहस्री च अपि** ஆயிரம் என்றே **प्रकटम् अभिहिता** தெளிவாக உணர்த்தப் பெற்றதோ, **यैः** எந்த பாதங்களால் **विश्वंभरा** உலகனைத்தையும் தாங்கும் பூமிப்பிராட்டியானவள் **प्राप्ता** அப்பாதங்கள் எங்கும் பரவியதால் அடையப்பெற்றுளோ, **अतिविततनोः** மிகப் பரந்த வடிவமுடையவனும் **विश्वमूर्तेः** ஜகத் முழுவதையும் தன் வடிவமாகக் கொண்டவனும் **विराजः** விராட்புருஷனுமான **विष्णोः** விஷ்ணுவினுடைய **तेभ्यः महद्भ्यः अङ्घ्रिपङ्केरुहेभ्यः** அந்தப் பெருமை வாய்ந்த பாத பங்கஜங்களுக்கு **सततम् अपि** எப்பொழுதுமே **नमः अस्तु** நமஸ்காரம் அமைவதாக.

வேதங்களிலே சொல்லப்பெற்ற திரிவிக்கிரமருடைய ஈரடிகளையும் போற்றியபின், புருஷஸூக்தத்திலும் மற்றைய வேதபாகங்களிலும் வருணிக்கப்பெற்ற விராட்ஸ்வரூபத்தை மனதிற் கொண்டு **सहस्रपात्** என்பவரின் ஆயிரம் பாதங்களை

யும் வணங்குகிருர். இந்த ஆயிரம் பாதங்களும் விச்வமூர்த்தி யான விராட் புருஷனைத் தாங்குவதால் பெருமை பெற்றன. ஆகவே, அவற்றைத் தாங்கும் பூமியும் **विश्वंभरा** அனைத்தை யும் தாங்குபவள் என்று பெயர் பெற்ருள் போலும்.

XIV. From those great lotus-feet of Vishnu, the all-pervading Virat of Universal form, finally arose the fourth caste at the original creation of the human race. Their number has been proclaimed as a thousand in all the Vedas. By their means (by their spreading out to measure the earth), the Earth (Visvambhara) was obtained (back from Bali). May our obeisance be to them for ever.

**विष्णोः पादद्वयाग्रे विमलनखमणिभ्राजिता राजते या**
**राजीवस्येव रम्या हिमजलकणिकालंकृताग्रा दलाली ।**
**अस्माकं विस्मयार्हाण्यखिलजनमनःप्रार्थनीयानि सेयं**
**दद्यादाद्याऽनवद्या ततिरतिरुचिरा मङ्गलान्यङ्गुलीनाम् ॥ १५ ॥**

15. விஷ்ணோ: பாதத்வயாக்ரே விமலநகமணிப்ராஜிதா ராஜதே யா
ராஜீவஸ்யேவ ரம்யா ஹிமஜலகணிகாலங்க்ருதாக்ரா தலாலீ |
அஸ்மாகம் விஸ்மயார்ஹாண்யகிலஜனமன:ப்ரார்(த்)தனீயானி ஸேயம்
தத்யாதாத்யா'னவத்யா ததிரதிருசிரா மங்கலான்யங்குலீனும் ||

**विष्णोः** மஹாவிஷ்ணுவினுடைய **पादद्वयाग्रे** இரண்டு பாதங்களின் முற்பாகத்திலே **या** எந்த விரல் வரிசையானது **विमलनखमणिभ्राजिता** மாசற்ற வைர மணிகள்போன்ற நகங்களாலே பிரகாசத்தைப் பெற்றதாய் **राजीवस्य** தாமரையின் **रम्या दलाली** அழகிய இதழ் வரிசையானது **हिमजलकणिकालंकृताग्रा इव** பனி நீர்த்துளிகளால் அலங்கரிக்கப் பெற்ற முற்பாகங்களை யுடையதுபோல **राजते** விளங்குகின்றதோ, **आद्या** (பக்தர்களின் விருப்பங்களைக் கொடுப்பதில்)

முதன்மை பெற்று விளங்குவதும் **अनवद्या** ஒன்றுக் கொன்று ஏற்றத் தாழ்வு என்னும் குற்றமற்றதும் **अतिरुचिरा** அதிக காந்தியோடு விளங்குவதுமான **सा इयम् अङ्गुलीनां ततिः** அந்த இந்த விரல்களின் வரிசை **विस्मयार्हाणि** வியக்கத்தக்கவையும் **अखिलजनमनःप्रार्थनीयानि** ஜனங்கள் எல்லோராலும் மனதால் விரும்பி வேண்டத் தக்கவையுமான **मङ्गलानि** மங்களங்களை **अस्माकं दद्यात्** நமக்குக் கொடுப்பதாக. [**अखिलजनमनःप्रार्थनीया हि** என்று பாடமானால் அது விரல் வரிசைக்கு விசேஷணமாகும்.]

பகவானுடைய திருவடிகளிலுள்ள பத்துவிரல்களும் வயிரமணிபோல் பிரகாசிக்கும் நகங்களோடு விளங்குகின்றன. அந்நகங்களோடு அமைந்த விரல்களின் வரிசையானது நுனியிலே பனிநீர்த் துளிகளைக் கொண்ட தாமரை யிதழ்களின் வரிசைபோல் மிக்க அழகு வாய்ந்துள்ளது. [இந்த மனோஹரக் காட்சியைக் கண்டவர்கள் அனைவரும் இக்காட்சியைத் தமது உள்ளத்திலே பதித்துக் கொள்ள விரும்புவார்கள்.] பக்தர்களுக்கு நன்மை பயப்பதில் முதன்மை பெற்றதும் ஸகல லக்ஷணங்கள் பொருந்தியதுமான இந்த விரல்கள் பத்தும், 'எவ்வாறு இப்பேறு பெற்றார்கள் இவர்கள்?' என்று யாவரும் வியக்கும்படியானவையும் எல்லோரும் ஏக மனதாக விரும்புகின்றவையுமான ஸகல மங்களங்களையும் நமக்கு அருளுவதாக.

XV. The (arching) line of toes in the foreparts of Vishnu's two feet are perfect and exceedingly lovely (to behold); with the spotless nails glistening jewel-like, they look like a lovely row of lotus petals whose tips are decked with drops of dew. The toes are foremost (in granting the wishes of the Lord's devotees). May this serried line of toes grant us those joys which evoke wonder and which are heartily desired by all.

यस्यां दृष्ट्वाऽमलायां प्रतिकृतिममराः संभवन्त्यानमन्तः
सेन्द्राः सान्द्रीकृतेर्ष्यास्त्वपरसुरकुलाशङ्कयाऽऽतङ्कवन्तः ।
सा सद्यः सातिरेकां सकलसुखकरीं संपदं साधयेन्नः
चञ्चच्चार्वंशुचक्रा चरणनलिनयोश्चक्रपाणेर्नखाली ॥ १६ ॥

16. யஸ்யாம் த்ருஷ்ட்வா'மலாயாம் ப்ரதிக்ருதிமமராஃ ஸம்பவந்த்யா-நமந்தஃ
ஸேந்த்ராஃ ஸாந்த்ரீக்ருதேர்ஷ்யாஸ்த்வபரஸுரகுலாசங்கயா''-தங்கவந்தஃ ।
ஸா ஸத்யஃ ஸாதிரேகாம் ஸகலஸுககரீம் ஸம்பதம் ஸாதயேந்நஃ
சஞ்சச்சார்வம்சுசக்ரா சரணநலினயோச் சக்ரபாணேர்-நகாலீ ॥

आनमन्तः (ஸ்ரீ சக்ரபாணியை) ஸாஷ்டாங்கமாக வணங்குகின்ற सेन्द्राः अमराः இந்திரனுள்ளிட்ட அமரர்கள் अमलायां यस्यां நிர்மலமான எந்த நகவரிசையிலே प्रतिकृतिं தங்கள் தங்களுடைய பிரதிபிம்பத்தை दृष्ट्वा तु கண்டதுமே अपरसुरकुलाशङ्कया வேறொரு தேவர் குழாம் என்ற சந்தேகத்தால் सान्द्रीकृतेर्ष्याः அதிகப் பொறாமை கொண்டவர்களாய் आतङ्कवन्तः संभवन्ति அச்சமுற்றவர்களாகிறார்களோ चक्रपाणेः சக்கிரக் கையனான மஹாவிஷ்ணுவின் चरणनलिनयोः அடித்தாமரைகள் இரண்டிலுமுள்ள चञ्चच्चार्वंशुचक्रा ஒளிர்கின்ற அழகிய சோதிவட்டத்தை யுடையதான सा नखाली அந்த நகவரிசையானது सकलसुखकरीं எல்லா ஸுகங்களையும் தருவதான सातिरेकां संपदं அளவுகடந்த சம்பத்தை नः நமக்கு सद्यः இப்பொழுதே साधयेत् அருளுவதாக.

கண்ணாடிகளை வரிசையாக வைத்தால் அவற்றுள் ஒவ்வொருவர் பிரதிபிம்பமும் பலவாகத் தோன்றும்; அவையெல்லாம் பிம்பங்களை விடச் சிறந்தனவாகவும் தோன்றும். எனவே, பகவானைத் திருவடிதொழும் இந்திரன் முதலிய தேவர்கள் தங்களுடைய பிரதிபிம்பங்களைக்

கண்ணாடிகளைப் போன்ற நகங்களிலே கண்டு, 'நாம் தாம் இப்பேறு பெற்றோம் என்றும் நமக்கன்றி நல்கான் என்றும் இறுமாந்தோமே; நம்மிலும் அநேகர் இப்பேறு பெற்றுச் சிறந்தவர்களாகக் காணப்படுகிறார்களே' என்று பொறாமையும் பீதியுங்கொண்டு மனம் வருந்துகிறார்கள். அப்படித் தம்மை யடைந்தோரை அந்த க்ஷணமே அதிக சம்பத்தோடு மேன்மை யுற்றவர்களாக்கும் நகங்களின் வரிசை இப்பொழுதே நமக்கும் சகல சம்பத்துக்களையும் இன்பங்களையும் அருளுவதாக.

XVI. The row of toe-nails on the (mirror-like) spotless surface of which, the gods along with Indra, making their obeisance, behold their reflections, and suspecting them to be another host of gods, grow jealous and are perturbed—may that lovely and glittering row of nails of the two lotus-feet of Vishnu (the Wielder of the Discus) vouchsafe at once unto us those surpassing riches which make one blissful.

पादाम्भोजन्मसेवासमवनतसुरव्रातभास्वत्किरोट-
प्रत्युप्तोच्चावचाश्मप्रवरकरगणैश्चित्रितं यद्विभाति ।
नम्राङ्गाणां हरेर्नो हरिदुपलमहाकूर्मसौन्दर्यहारि-
च्छायं श्रेयःप्रदायि प्रपदयुगमिदं प्रापयेत्पापमन्तम् ॥ १७ ॥

17. பாதாம்போஜன்மஸேவாஸமவனதஸுரவ்ராதபாஸ்வத்கிரீட-
ப்ரத்யுப்தோச்சாவசாஶ்ம-ப்ரவரகரகணைஶ் சித்ரிதம் யத்விபாதி |
நம்ராங்காணும் ஹரேர்நோ ஹரிதுபல-மஹாகூர்மஸௌந்தர்ய-ஹாரி-
ச்சாயம் ஶ்ரேயஃப்ரதாயி ப்ரபதயுகமிதம் ப்ராபயேத்பாபமந்தம் ||

यत् எந்த இரண்டு புறங்காலும் पादाम्भोजन्म-सेवासमवनत-सुरव्रात-भास्वत्किरीट-प्रत्युप्तोच्चावचाश्म-प्रवरकरगणैः திருவடித் தாமரைகளிலே ஸேவைசெய்யும்போது நன்றாக வணங்கிய தேவர் குழாங்களின் ஒளி வீசுகின்ற கிரீடங்களிலே இழைக்

கப்பெற்ற ரத்ன வரிசைகளின் கிரணத் தொகுதிகளால் **चित्रितं** பலவகை வர்ணங்களையும் பெற்றதாக **विभाति** விளங்குகின்றதோ, **हरिदुपल-महाकूर्म-सौन्दर्य-हारिच्छायं** இந்திர நீலக்கல்மயமான பெரியதோர் ஆமையின் வடிவழகை அபகரிக்கும் சாயலையுடையதும் **श्रेयः प्रदायि** பெருநல மளிப் பதுமான **हरेः** ஸ்ரீஹரியினுடைய **इदं प्रपदयुगं** இந்த இரண்டு புறங்காலும் **नम्राङ्गाणां नः** வணங்கிய அவயவங்களையுடைய நமது **पापं** பாபத்தை **अन्तं प्रापयेत्** நாசமுறச் செய்வதாக.

தேவர்கள் பகவானை ஸாஷ்டாங்கமாக வணங்கும் போது அவர்களுடைய முடியில் விளங்கும் கிரீடங்களி லுள்ள உயர்ந்த நவரத்னங்களின் சோபையோடு நீல வர்ணனை பகவானுடைய புறங்கால் இரண்டின் நிறமும் கலந்து விசித்திரவர்ணமாக விளங்குகின்றது. பகவானுடைய புறங்கால்களின் வடிவம் இந்திர நீலத்தாலான ஒரு கூர்மத்தைப்போல அழகுவாய்ந்தது. அத்தகைய புறங்கால் களிலே தண்டனிட்டு, நம்முடைய ஸகல பாபங்களும் தொலையப் பெற்று, நாம் பெருநலம் பெறுவோமாக.

XVII. The two insteps of Vishnu's (Hari's) feet shine multicolored, lit by the profuse radiance of the precious stones set in the brilliant crowns worn by the multitude of Devas who bend their heads low in adoration at His feet. Each of those insteps has won by its pleasing shape the loveliness of the great Emerald Tortoise. May this pair of insteps, which confers all good, put an end to the sins of us (all) who bend ourselves in adoration at His feet.

श्रीमत्यौ चारुवृत्ते करपरिमलनानन्दहृष्टे रमायाः
सौन्दर्याढ्येन्द्रनीलोपलरचितमहादण्डयोः कान्तिचोरे ।
सूरीन्द्रैः स्तूयमाने सुरकुलसुखदे सूदितारातिसङ्घे
जङ्घे नारायणीये मुहुरपि जयतामस्मदंहो हरन्त्यौ ॥ १८ ॥

18. ஸ்ரீமத்யௌ சாருவ்ருத்தே கரபரிமலனானந்தஹ்ருஷ்டே ரமாயாஃ
ஸௌந்தர்யாட்யேந்த்ரநீலோபலரசித - மஹாதண்டயோஃ காந்தி-
சோரே |
ஸூரீந்த்ரைஃ ஸ்தூயமானே ஸுரகுலஸுகதே ஸூதிதாராதி-
ஸங்கே
ஜங்கே நாராயணீயே முஹுரபி ஜயதா மஸ்மதம்ஹோ
ஹரந்த்யௌ ||

**श्रीमत्यौ** காந்தி வுடையவைகளும் **चारुवृत्ते** அழகாக உருண்டு திரண்டவைகளும் **सौन्दर्याढ्येन्द्रनीलोपल-रचित-महादण्डयोः कान्तिचोरे** ஸௌந்தர்யம் நிறைந்த இந்திரநீலக் கற்களால் அமைந்த இரண்டு பெரிய தண்டுகளின் காந்தியை அபகரிப்பவைகளும் **सूरीन्द्रैः स्तूयमाने** மிகச் சிறந்த ஞானி களாலே துதிக்கப்பெற்றவையும் **सूदितारातिसंघे** பகைவர்களை யெல்லாம் ஒருங்கே அழித்தவையும் **सुरकुलसुखदे** தேவர்கள் எல்லோர்க்கும் சுகத்தை யளித்தவையும் **रमायाः करपरिमल-नानन्दहृष्टे** ஸ்ரீதேவியின் திருக்கைகள் அடிக்கடி வருடுவதால் உண்டான ஆனந்தத்தால் மயிர்கூச்செறிந்து விளங்குபவையு மான **नारायणीये जंघे** ஸ்ரீமந் நாராயணனுடையதான முன்னங் கால்கள் இரண்டும் **अस्मदंहः** நம்முடைய பாபத்தை **मुहुः अपि** உடனுக்குடனே **हरन्त्यौ** போக்குபவையாகி **जयताम्** வெற்றி பெற்று விளங்கவேண்டும்.

பரம ஞானிகளாலே வேண்டப்பெற்ற பகவானுடைய முன்னங்கால்களே தேவர்களைப் பகைக்கும் அசுரர்களை இடித்துத் துவம்சஞ்செய்து தேவர்களுக்கு இன்பத்தைத் தருகின்றன. இவற்றின் மென்மையையும் வடிவழகையும் இந்திர நீலத்தாலான பெருந்தூண்களைப்போன்ற காந்தியை யும் கண்டு, இவை எவ்வாறு போரிலே அசுரர்களை நெருக்கினவோ என்று வருந்தி, ஸ்ரீதேவி தன் மெல்லிய திருக்கைகளால் அடிக்கடி இவற்றைத் தடவிக் கொடுக்கும் போது, தடவிய இடமெங்கும் மயிர்க்கூச்சம் உண்டாகும். எல்லோருக்கும் இவனே கதி என்னும்படி, பகவானுக்கு

நாராயணன் என்னும் பெயரைப் பொருத்தமாக்கி விளங்கும் இந்த முன்னந்தாள்கள் நம்முடைய விரோதிகளான பாபங்களையும் துவைத்தழித்து நாமும் அவற்றைக் கொண்டாடுமாறு வெற்றியோடு விளங்குவனவாக.

XVIII. The two legs (shanks) of (Narayana) Vishnu are graceful; they are rounded, comely and well-formed; they are thrilled with joy, being gently massaged by Lakshmi's (Ramā's) hand. They outshine the most lovely pair of emerald pillars. Praised by the great sages, they confer bliss on all the gods, destroying their enemy hosts. May those legs of Vishnu be ever victorious, depriving us of our sins.

सम्यक्साह्यं विधातुं सममिव सततं जङ्घयोः खिन्नयोर्ये
भारीभूतोरुदण्डद्वयभरणकृतोत्तम्भभावं भजेते ।
चित्तादर्शं निधातुं महितमिव सतां ते समुद्धायमाने
वृत्ताकारे विधत्तां हृदि मुदमजितस्यानिशं जानुनी नः ॥१९॥

19. ஸம்யக்ஸாஹ்யம் விதாதும் ஸமமிவ ஸததம் ஜங்கயோஃ கின்னயோர்யே
பாரீபூதோருதண்டத்வய-பரணக்ருதோத்தம்ப-பாவம் பஜேதே |
சித்தாதர்ஶம் நிதாதும் மஹிதமிவ ஸதாம் தே ஸமுத்காயமானே
வ்ருத்தாகாரே விதத்தாம் ஹ்ருதி முதமஜிதஸ்யாநிஶம் ஜானுனீ நஃ ||

जंघयोः खिन्नयोः (सत्योः) முன்னங்கால்கள் இரண்டும் இற்றுத்தளர்ந்தபோது समम् அதேஸமயத்திலே सम्यक् செவ்வையாக साह्यं विधातुं சகாயத்தைச் செய்வதற்காக ये எந்த முழங்கால்கள் இரண்டும் भारीभूतोरुदण्डद्वयभरणकृतोत्तम्भभावं மிகவும் கனமுடையவையான தொடைகளாகிய தண்டுகளைத் தாங்குவதற்கு அமைத்த முட்டுகளின் தன்மையை सततं எப்பொழுதும் भजेते इव அடைகின்றன போல்வனவோ, सतां நல்லோர்களுடைய महितं चित्तादर्शं போற்றப்பெற்றதான சித்தம் என்னும் கண்ணாடியை निधातुं பத்திரமாக வைப்பதற்கு

**समुद्रायमाने इव** ஆபரணப் பெட்டிபோல் விளங்கும் **अजितस्य** என்றும் தோல்வியுறாத பகவானுடைய **वृत्ताकारे** வட்ட வடிவுள்ள **ते जानुनी** அந்த முழங்கால்கள் இரண்டும் **नः हृदि** நம்முடைய இருதயத்திலே **अनिशं** எப்போதும் **मुदं** மகிழ்ச்சியை **विधत्ताम्** அளிப்பனவாக.

பகவானுடைய தொடைகளின் பாரத்தைப் பார்த்தால் முன்னங்கால்களாலே தாங்க முடியுமோ முடியாதோ என்ற சந்தேகம் தோன்றும்; ஒரு வேளை தாங்க முடியாமல் இற்றுத்தளர நேர்ந்தால் அவை அப்பொழுதே நன்கு வலுப் பெறுவதற்காகக் கட்டிய முட்டுக்கட்டைகளைப்போலே தோன்றுகின்றன பகவானுடைய முழங்கால்கள்; மேலும், நல்லோர்களின் சித்தமானது யசோதை 'மத்தின் பழந்தாம் பால் ஒச்சப் பயத்தால் தவழ்ந்த' பாலகிருஷ்ணனுடைய முழந்தாளின் தழும்பிலே எப்பொழுதும் ஈடுபட்டு நிர்மலமாய்க் கண்ணாடிபோன்றிருக்கும். அக் கண்ணாடியை வைக்கும் ஆபரணப்பேழை போன்றவை வட்டவடிவமான அந்த முழங்கால்கள் இரண்டும். அவை நம்முடைய மனதை மாசற்றதாக்கி நமக்கு மகிழ்ச்சி தருவனவாக.

XIX. The two knees of Vishnu (the Unconquerable One) are like props set up for bearing the burden of the pair of the heavy thighs (of the Lord); for, they are ever ready to render full help the moment the shanks feel oppressed. They serve as caskets for preserving the valued (circular) mirrors of good men's hearts. May those two rounded knees ever bless our hearts with joy.

**देवो भीतिं विधातुः सपदि विदधतौ कैटभाख्यं मधुं चा-**
**प्यारोप्यारूढगर्वावधिजलधि ययोरादिदैत्यौ जघान ।**
**वृत्तावन्योन्यतुल्यौ चतुरमुपचयं बिभ्रतावभ्रनीलौ**
**ऊरू चारू हरेस्तौ मुदमतिशयिनीं मानसे नो विधत्ताम् ॥२०॥**

20. தேவோ பீதிம் விதாதுஃ ஸபதி விதததௌ கைடபாக்யம் மதும்சா-
ப்யாரோப்யாரூடகர்வாவதிஜலதி யயோராதிதைத்யௌ ஜகான ।
வ்ருத்தாவன்யோன்யதுல்யௌ சதுரமுபசயம்பிப்ரதாவப்ரநீலௌ
ஊரு சாரூ ஹரேஸ்தௌ முதமதிஶயினீம் மானஸே நோ விதத்-
தாம் ॥

**आरूढगर्वौ** கர்வம் தலைக்கேறினவர்களாய் **सपदि** உடனேயே **विधातुः** பிரமனுக்கு **भीतिं** பயத்தை **विदधतौ** உண்டுபண்ணிய **आदिदैत्यौ** ஆதி அசுரர்களான **कैटभाख्यं मधुं च** கைடபன் என்பவனையும் மதுவையும் **देवः** பகவான் **ययोः** (எந்தத் தொடைகள் இரண்டிலும்) **आरोप्य** தூக்கி வைத்து **अधिजलधि** சமுத்திரத்திலேயே **जघान** கொன்றாரோ, **चतुरम् उपचयं बिभ्रतौ** நன்றாகப் பெருத்தவையும் **वृत्तौ** உருண்டு திரண்டவையும் **अभ्रनीलौ** கார்மேகத்தைப்போல நீல நிறங்கொண்டவையும் **अन्योन्यतुल्यौ** ஒன்றுக்கொன்றே ஒத்தவையுமான **हरेः** ஸ்ரீ ஹரியினுடைய **तौ चारू ऊरू** அந்த அழகான தொடைகள் இரண்டும் **नः मानसे** நம்முடைய மனதிலே **अतिशयिनीं मुदं** அளவுகடந்த மகிழ்ச்சியை **विधत्ताम्** அருளுவதாக.

ஆதியில் எம்பெருமான் சதுர்முகனைப் படைத்து அவனுக்கு வேதத்தை உபதேசித்து, 'நீ நாட்டைப் படை' என்று அனுக்ரஹிக்க, அவனும் அவ்வாறே தொடங்க, பகவானிடமிருந்து, ரஜஸ் தமஸ் வடிவர்களான மது, கைடபன் என்னும் இரண்டு அசுரர்கள் தோன்றி பிரமனிடமிருந்து வேதத்தை அபஹரித்து கடலுள்ளே புகுந்துகொண்டார்கள்.

தன் உயிருக்குப் பயந்து அபயம் வேண்டிய பிரமனைக் காப்பதற்காக அக்கடலிலே சென்று அம் மதுகைடபர்களை எந்தத் தொடைகளிலே வைத்து ஸம்ஹரித்தாரோ, அவை இரண்டும் பயநிவிருத்திக்கு ஹேதுவாயின; அன்றியும், இந்திரநீல ரத்தினங்களைப்போலப் பிரகாசித்து, உருண்டு திரண்டு ஒன்றை ஒன்று ஒத்து வேறு இணையற்றதாக விளங்கி, காந்தியாலும் அழகாலும் காண்போருக்கு மகிழ்ச்சி

யளிக்கின்ற அவை நம் மனதிலே பதிந்து, நம்முடைய ஸம்ஸார பயத்தை நீக்கி, நமக்கு அளவிலா மகிழ்ச்சியைத் தருவனவாக.

XX. Placing them on His thighs, in mid-ocean, the Lord killed instantly the first two Asuras, called Kaitabha and Madhu, who, in their overweening pride, terrified Brahma. These thighs are rounded, full and lovely, each like unto the other (and having no other equal); and they are dark in hue like the rain-cloud. May those two comely thighs of Vishnu (Hari) bless our hearts with transcendent bliss.

पीतेन द्योतते यच्चतुरपरिहितेनाम्बरेणात्युदारं
जातालङ्कारयोगं जलमिव जलधेर्वाडवाग्निप्रभाभिः ।
एतत्पातित्यदान्नो जघनमतिघनादेनसो माननीयं
सातत्येनैव चेतोविषयमवतरत्पातु पीताम्बरस्य ॥ २१ ॥

21. பீதேன த்யோததே யச்சதுரபரிஹிதேனும்பரேணுத்யுதாரம்
ஜாதாலங்காரயோகம் ஜலமிவ ஜலதேர்பாடபாக்னிப்ரபாபிஃ |
ஏதத் பாதித்யதான்னோ ஜகனமதிகனுதேனஸோ மானனீயம்
ஸாதத்யேனைவ சேதோவிஷயமவதரத் பாது பீதாம்பரஸ்ய ||

**जलधेः जलं** சமுத்திரத்தின் ஜலம் **वाडवाग्निप्रभाभिः** வடவாக்கினியின் சோதிகளாலே **इव** போல **तत्** எந்த அல்குற்பிரதேசமானது **चतुरपरिहितेन पीतेन अम्बरेण** அழகாக உடுத்திய பீதாம்பரத்தால் (செம்மஞ்சள் நிறமுடைய பட்டாடையால்) **जातालंकारयोगं** உண்டான அலங்காரத்தோடு பொருந்தியதாய் **अत्युदारं** மிக்க வளமுடையதாக விளங்குகின்றதோ, **पीताम्बरस्य** பீதாம்பரத்தைத் தரித்து விளங்கும் மஹாவிஷ்ணுவினுடைய **एतत् माननीयं जघनं** போற்றத்தக்கதான இந்த அல்குற்பாகம் (ஜகனம்) **सातत्येन एव** எப்பொழுதுமே **नः** நம்முடைய **चेतोविषयं अवतरत्** (மனதிலே படிந்ததாகி) மனதிற்கு இலக்காகத் தோன்றுவதாகி **पातित्यदात्** பதித

ளுகச் செய்வதான **अतिघनात् एनसः** மிகக்கொடிய பாபத்தி னின்று **नः पातु** நம்மைப் பாதுகாப்பதாக.

கருங்கடலுக்குள் வடவைத் தீ இருக்கிறது. அவ் வட வைத்தீயின் ஜ்வாலைகளால் அக்கடல் ஓரழகு பெறுகின்றது. அதுபோலவே, பீதாம்பரதாரியான பகவானுடைய ஜகன பாகமும் அழகாகச் சாத்திய பீதாம்பரத்தின் சோபை யால் ஓரழகு பெற்று விளங்குகின்றது. எல்லோராலும் போற்றத்தகுந்த அந்த ஜகனபாகம் எப்போதும் நம் மன திற்கு இலக்காகி, நரகத்திலே புகச்செய்யும் அளவுகடந்த பாபத்தினின்று நம்மைக் காப்பதாக.

XXI. The loins of Vishnu (who wears a robe of purple) shine in exceeding splendour, covered with the purple robe worn richly about them and they appear like the Ocean's waters, decked with the splendours of the Badaba Fire (which is in the bottom of the sea, consuming its waters). May these loins, which deserve all honour, condescend to be ever in our mind's eye and save us from falling into heinous sin which leads one to damnation.

**यस्या दाम्ना त्रिधाम्नो जघनकलितया भ्राजतेऽङ्गं यथाऽब्धेः**
**मध्यस्थो मन्दराद्रिर्भुजगपतिमहाभोगसंनद्धमध्यः ।**
**काञ्ची सा काञ्चनाभा मणिवरकिरणैरुल्लसद्भिः प्रदीप्ता**
**कल्यां कल्याणदात्री मम मतिमनिशं कम्ररूपा करोतु ॥ २२ ॥**

22. யஸ்யா தாம்னா த்ரிதாம்னோ ஜகனகலிதயா ப்ராஜதே’ங்கம் யதா’-ப்தேஃ
மத்யஸ்தோ மந்தராத்ரிர் புஜகபதிமஹாபோகஸம்நத்தமத்யஃ |
காஞ்சீ ஸா காஞ்சனாபா மணிவரகிரணைருல்லஸத்பிஃ ப்ரதீப்தா
கல்யாம் கல்யாணதாத்ரீ மம மதிமனிசம் கம்ரரூபா கரோது ||

**त्रिधाम्नः** விண், மலை, கடல் என்னும் மூன்று இடங்களை யும் வாஸஸ்தானமாகக் கொண்ட பகவானுடைய **अङ्गं** திரு

மேனியானது **जघनकलितया** அல்குல் பாகத்தைச் சுற்றி அமைக்கப்பெற்ற **यस्याः** எந்த அரைஞாணினுடைய **दाम्ना** முடிச்சினால் **भुजगपतिमहाभोगसंनद्धमध्यः** அரவரசனான வாஸுகியின் பெரியதான உடலினால் சுற்றப்பெற்ற இடைப் பாகத்தை உடையதும் **अब्धेः** ஸமுத்திரத்தின் **मध्यस्थः** மத்தியில் இருப்பதுமான **मन्दराद्रिः यथा** மந்தர மலைபோல **भ्राजते** விளங்குகிறதோ, **उल्लसद्भिः मणिवरकिरणैः** சிறந்த ரத்நங்களிலிருந்து எழுந்த ஒளிக்கதிர்களால் **प्रदीप्ता** நன்றாக ஜ்வலிக்கிறதாயும் **कम्ररूपा** மனதைக் கவருகின்ற வடிவமுடையதாயும் **काञ्चनाभा** பொன்னிறமுடையதாயு முள்ள **सा** அந்த **कल्याणदात्री काञ्ची** எல்லாமங்களங்களையும் அளிப்பதான அரைஞாண் **मम मतिस्** என்னுடைய புத்தியை **अनिशं** எப்பொழுதும் **कल्यां** திறமையுடையதாக **करोतु** செய்வதாக.

ஸமுத்ரத்தைக் கடையும்போது அதனிடையில் இட்டு வாஸுகியாலே சுற்றப்பெற்ற மத்யபாகத்தையுடைய மந்தர பர்வதம்போல், திருவரையிலே சாத்திய உதரபந்தனத்துடன் பகவானுடைய திருமேனி விளங்குகின்றது. பொன்மயமாயும், ரத்னங்களினாலே சோபிப்பதாயும், காண்போர் மனதைக் கவரும் அழகு வாய்ந்ததாயும், தன்னை அடைந்தவர்களுக்கு எப்போதும் நன்மை பயப்பதாயுமுள்ள அந்த எம்பெருமான் திருவயிற்று உதரபந்தனம் என்னுள்ளத்தில் நின்றுலாவி என் புத்தியைத் திறமுடையதாகச் செய்ய வேணும்.

XXII. The body of Vishnu (who has His abode in the three spheres) shines resplendent with the waist-band Kanchi wound round His waist, even like the Mandara mountain placed in mid-ocean with its sides wound round by the huge body of Vasuki, the king of the serpents. It is of brilliant gold and glitters with the splendour of great gems and is very attractive to behold. May that Kanchi, which confers good, make my mind ever bright and happy.

**उन्नम्रं कम्रमुच्चैरुपचितमुदभूद्यत्र पत्रैर्विचित्रैः
पूर्वं गीर्वाणपूज्यं कमलजमधुपस्यास्पदं तत्पयोजम् ।
तस्मिन्नीलाश्मनीलैस्तरलरुचिजलैः पूरिते केलिबुद्ध्या
नालीकाक्षस्य नाभीसरसि वसतु नश्चित्तहंसश्चिराय ॥ २३ ॥**

23. உன்னம்ரம் கம்ரமுச்சைருபசிதமுதபூத் யத்ர பத்ரைர்விசித்ரைஃ
பூர்வம் கீர்வாணபூஜ்யம் கமலஜமதுபஸ்யாஸ்பதம் தத்
பயோஜநம் |
தஸ்மின் நீலாஶ்மநீலைஸ்தரலருசிஜலைஃ பூரிதே கேளிபுத்த்யா
நாலீகாக்ஷஸ்ய நாபீஸரஸி வஸது நஶ்சித்தஹம்ஸஶ்சிராய ||

**यत्र** எந்த நாபியாகிய.மடுவிலே **तत्** அந்த (வர்ணிக்க முடியாததும்) **उन्नम्रं** உயர எழுந்ததும் **कम्रं** காந்தியுடையதும் **विचित्रैः उच्चैः पत्रैः** பலவகைப் பட்டவையான சிறந்த இதழ்களாலே **उपचितं** மிகப்பெரிதாக விளங்குவதும் **गीर्वाण-पूज्यं** தேவர்களாலே போற்றுவதற்கு உரியதும் **कमलजमधु-पस्य** தாமரையிலே பிறந்த பிரமனாகிய வண்டிற்கு **आस्पदं** இருப்பிடமாவதுமான **पयोजं** தாமரையானது **पूर्वं** முதன் முதலாக **उदभूत्** மேலெழுந்ததோ **नीलाश्मनीलैः** இந்திர நீலங் களைப்போன்று நீலநிறமுடையவையான **तरलरुचिजलैः** (பகவானுடைய திருமேனியின்) அலையெழுந்த ஒளிகளாகிய நன்னீர்களாலே **पूरिते** நிரம்பியதான **नालीकाक्षस्य** தாமரைக் கண்ணனுடைய **तस्मिन् नाभीसरसि** அந்தத் திருநாபியாகிய மடுவிலே **नः** நம்முடைய **चित्तहंसः** மனம் ஆகிய ஹம்ஸமானது **चिराय** நீண்டகாலம் **केलिबुद्ध्या** விளையாடும் நோக்கத்தோடு **वसतु** வாழ்வதாக.

ஆதிகாலத்திலே எம்பெருமானுடைய திருநாபியில் ஒரு தாமரைப்பூ விசித்திரமான இதழ்களுடன் தோன்றிற்று. அதில் உதித்த பிரமன் வண்டுபோல் அங்கேயே அமர்ந்திருக்கிறான். அத் தாமரை மலர் எல்லா தேவதைகளாலும் வணங்கத்தக்கது. அத்தாமரையையுடையதும்

இந்திர நீல வர்ணமுடைய எம்பெருமானது திருமேனியின் காந்தியாகிய வெள்ளத்தினுல் நிறைந்ததுமான நாபியாகிய மடுவிலே நம்முடைய மனமாகிய ஹம்ஸமானது உல்லாஸமாக வாழ்வதாக.

XXIII. From the pool which is the navel of Vishnu (the Lotus-eyed One) in the beginning, arose upward, a lotus which, large and attractive with its wonderful multicolored petals, became the home of (the Lotus-born) Brahma the Bee, and deserved the worship of the gods. The waters of that navel-pool are the abundant blue rays of His emerald body. In that lotus-pool, may the swan that is our mind dwell for ever in a glad and sportive mood.

पातालं यस्य नालं वलयमपि दिशां पत्रपङ्क्तीर्नगेन्द्रान्
विद्वांसः केसरालीर्विदुरिह विपुलां कर्णिकां स्वर्णशैलम् ।
भूयाद्गायत्स्वयंभूमधुकरभवनं भूमयं कामदं नो
नालीकं नाभिपद्माकरभवमुरु तन्नागशय्यस्य शौरेः ॥२४॥

24. பாதாலம் யஸ்ய நாலம் வலயமபி திஶாம் பத்ரபங்க்தீர்நகேந்த்ரான்
வித்வாம்ஸ: கேஸராலீர் விதுரிஹ விபுலாம் கர்ணிகாம் ஸ்வர்ண-
ஶைலம் |
பூயாத் காயத்ஸ்வயம்பூமதுகரபவனம் பூமயம் காமதம் நோ
நாலீகம் நாபிபத்மாகரபவமுரு தன் நாகஶய்யஸ்ய ஶௌரே: ||

इह இந்த லோகத்திலே विद्वांसः அறிவிற் சிறந்தவர்கள் यस्य யாதொரு தாமரை மலருக்கு पातालं பாதாள லோகத்தை नालं தண்டாகவும் दिशां वलयं திக்குகளின் மண்டலத்தை पत्रपङ्क्तीः இதழ்களின் வரிசைகளாகவும் नगेन्द्रान् சிறந்த மலேகளை केसरालीः தாதுகளின் வரிசைகளாகவும் स्वर्णशैलं மேருமலையை विपुलां कर्णिकां அகன்ற பொகுட்டாகவும் विदुः அறிந்துகொள்கிறுர்களோ, गायत्स्वयंभूमधुकरभवनं (வேத) கானஞ் செய்து கொண்டிருக்கும் பிரமன் என்னும்

வண்டின் வாஸஸ்தானமும் **भूमयं** பூமிஸ்வரூபமும் **नागशय्यस्य** அரவணையனான **शौरेः** வாஸுதேவ மூர்த்தியினுடைய **नाभिपद्माकरभवं** நாபியாகிய தாமரைத் தடாகத்திலே உண்டானதும் **उरु** பெரியதுமான **तत्** **नालीकं** அந்தத் தாமரையானது **नः** நமக்கு **कामदं** அபீஷ்டங்களைத் தருவதாய் **भूयात्** அமைவதாக.

அரவணையிலே துயிலும் பரம புருஷனுடைய திரு நாபித்தடத்திலே தோன்றிய தாமரையே பிரமனைத் தோன்றச் செய்தது. அதன் தண்டு பாதாளம் வரைச் செல்வது; அதன் புறவிதழ்கள் திக்குகளை அளாவி யிருக்கின்றன; பொகுட்டு என்னும் அதன் மத்தியபாகம் மஹாமேரு; அப்பொகுட்டைச் சுற்றியுள்ள பூந்தாதுகளே குலபர்வதங்கள். அக்கமலத்தில் சதுர்முகன் வேதகானஞ் செய்து கொண்டு வண்டுபோல் இருக்கிறான். இப்படிப் பூமிபோன்ற அத்தாமரை நமக்கு இஷ்டங்களை தந்தருளுவ தாக.

XXIV. Of that big lotus that grows in the lotus-pool of the navel of Vishnu (Sauri) whose bed is the Serpent (Sesha), the wise men in this world (here) realise that its stem extends to Patala (the lowest world), and the circle of its outer petals to the utmost limits of space; and they consider the lines of stamens to be the grand ranges of mountains and its large central pod to be the golden mountain Meru. That lotus is the Earth and is the home of Brahma, the Bee, who is ever singing (the Vedas). May it grant us our desires.

आदौ कल्पस्य यस्मात्प्रभवति विततं विश्वमेतद्विकल्पैः
कल्पान्ते यस्य चान्तः प्रविशति सकलं स्थावरं जङ्गमं च ।
अत्यन्ताचिन्त्यमूर्तेश्चिरतरमजितस्यान्तरिक्षस्वरूपे
तस्मिन्नस्माकमन्तःकरणमतिमुदा क्रीडतात्क्रोडभागे ॥ २५ ॥

25. ஆதௌ கல்பஸ்ய யஸ்மாத்ப்ரபவதி விததம் விஶ்வமேதத்-
விகல்பை:
கல்பாந்தே யஸ்ய சாந்த: ப்ரவிஶதி ஸகலம் ஸ்தாவரம் ஜங்கமம் ச|
அத்யந்தாசிந்த்யமூர்(த்)தேஶ்சிரதரமஜிதஸ்யாந்தரிக்ஷஸ்வரூபே
தஸ்மின்னஸ்மாகமந்த:கரணமதிமுதா க்ரீடதாத் க்ரோடபாகே ||

**यस्मात्** எந்த (அடிவயிற்றின் உட்பாகத்தினின்றும்) **कल्पस्य आदौ** கல்பத்தின் தொடக்கத்திலே **विश्वम् एतत्** இந்த உலகம் **विकल्पैः विततं** பல்வேறு மாறுபாடுகளால் விரிந்ததாக **प्रभवति** தோற்றமடைகின்றதோ, **कल्पस्य अन्ते** கல்பமுடிவிலே **सकलं स्थावरं जङ्गमं च** அசையும் பொருளும் அசையாப் பொருளுமாகிய எல்லாம் **यस्य च अन्तः** எதனுக்குள்ளேயே **प्रविशति** புகுகின்றதோ, **अत्यन्ताचिन्त्यमूर्तेः** (இத்தன்மையன் என்று) கருதவேயியலாத வடிவுடையவரான **अजितस्य** (யாராலும்) வெல்லமுடியாதவரான பகவானுடைய **तस्मिन्** அத்தகையதான **अन्तरिक्षस्वरूपे** அந்தரிக்ஷ ஸ்வரூபமான (இடைவானத்தின் வடிவத்தையுடையதான) **क्रोडभागे** அடிவயிற்றிலே **अस्माकम् अन्तःकरणं** நம்முடைய மனம் **चिरतरं** நீண்ட காலம் **अतिमुदा क्रीडतात्** அதிக மகிழ்ச்சியோடு உலாவுவதாக.

பூமி ஸ்வரூபமான உந்தித்தாமரைக்கும் பரமாகாச ஸ்வரூபமான வக்ஷஸ்தலத்திற்கும் இடையிலே இடைவானத்தைப்போல விளங்கும் வயிற்றின் உட்பாகமானது பிரளய காலங்களிலே ஸகல ஜகத்திற்கும் புகலிடமாகின்றது; உயிருடையவை, உயிரில்லாதவை எல்லாம் அங்கே கல்பமுடிவிலே புகுந்து மீண்டும் சிருஷ்டித் தொடக்கத்திலே வெளியிலே வருகின்றன. இத்தன்மையது என்று கருதவொண்ணாத மேனிபடைத்த பகவானுடைய அந்த க்ரோடபாகத்திலே நம்முடைய மனது எப்பொழுதும் ஸஞ்சரித்துக் கொண்டு இன்புறுவதாக.

XXV. The inner region of the stomach of Vishnu (the Unconquerable One) whose Form is verily beyond the utmost reach of thought is the place whence, in the beginning of

creation (Kalpa), was born all this universe, so wide in its variety; and it is to that inner region that all things, both animate and inanimate, must proceed and enter at the final Dissolution. That inner region is indeed the mid-heavens (Antariksha situate between Vishnu's navel-lotus which is the Earth and His broad chest which is Heaven). In that region, may our minds disport for long with exceeding joy.

कान्त्यम्भःपूरपूर्णे लसदसितवलीभङ्गभास्वत्तरङ्गे
गम्भीराकारनाभीचतुरतरमहावर्तशोभिन्युदारे ।
क्रीडत्वानद्धहेमोदरनहनमहावाडवाग्निप्रभाढ्ये
कामं दामोदरीयोदरसलिलनिधौ चित्तमत्स्यश्चिरं नः ॥ २६ ॥

26. காந்த்யம்பஃபூரபூர்ணே லஸதஸிதவலீ-பங்கபாஸ்வத்-தரங்கே
கம்பீராகார-நாபீசதுரதர-மஹாவர்(த்)தஶோபின்யுதாரே |
க்ரீடத்வாநத்த-ஹேமோதரநஹன-மஹாபாடபாக்னிப்ரபாட்யே
காமம் தாமோதரீயோதர-ஸலிலநிதௌ சித்தமத்ஸ்யஶ் சிரம் நஃ ||

**कान्त्यम्भःपूरपूर्णे** காந்தியாகிய நீர் வெள்ளத்தால் நிறைந்ததும் **लसदसित-वलीभङ्ग-भास्वत्तरङ्गे** ஒளிர்கின்றவையும் கரியவையுமான (த்ரிவலிகளாகிய) வயிற்று மடிப்புகளாகிய ஒளி மிகுந்த அலைகளையுடையதும் **गम्भीराकारनाभीचतुरतर-महावर्तशोभिनि** ஆழமும் தெளிவுமுடைய வடிவங்கொண்ட திருவுந்தியாகின்ற (மனதைச் சுழித்து தன்னுள் அகப்படுத்திக்கொள்ளும்) மிக்க திறமை வாய்ந்த பெருஞ் சுழலால் விளங்குவதும் **आनद्धहेमोदरनहन-महावाडवाग्निप्रभाढ्ये** மேலே சுற்றிய பொன்னாலான உதரபந்தனமாகிய பெரிய வடவைத் தீயின் ஒளியால் நிறைந்ததும் **उदारे** வளமுடையதுமான **दामोदरीयोदरसलिलनिधौ** தாமோதரனுடையதான உதரமாகிய சமுத்திரத்திலே **नः** நம்முடைய **चित्तमत्स्यः** சித்தம் என்னும் மீன் **चिरं** வெகு காலம் **कामं** தன்னிஷ்டம் போல் **क्रीडतु** விளையாடுவதாக.

தமம் முதலிய ஸாதனங்களால் பண்படுத்திய மனமுடையவர்களால் மட்டுமே அறியக்கூடியவரான தாமோதரனுடைய வயிற்றின் மேற்புறம் திருமேனியின் நிறத்தாலும் நாபியாகிய நீர்ச்சுழியாலும் த்ரிவலிகள் ஆகிய அலைவரிசைகளாலும் கடலைப்போல விளங்குகின்றது. இடையிலே சுற்றிய அரைஞாண் செம்பொன்னின் காந்தியோடு ஜ்வலிப்பதால், இக் கடலின் புறத்தே ஒரு வடவாக்னி இருக்கிறதோ என்று தோன்றுகிறது. அத்தகைய எம்பெருமானுடைய திருவுதரமாகிய ஸமுத்திரத்திலே நம் மனமாகிய மீன் துள்ளிக் களிப்பதாக.

தாமோதரன்—கண்ணிநுண் சிறுத் தாம்பினால் கட்டுண்ட உதரத்தை யுடையவன் என்றும் அர்த்தம்.

XXVI. The outer surface of Vishnu's (Damodara's) stomach is a noble ocean full of the waters of (dark) effulgence; and the dark resplendent triple folds, *Trivali*, are the bright breakers of that ocean. This ocean has a grand whirlpool of formidable strength in the deep navel of Vishnu. The gold band round Vishnu's waist has the rich brilliance of the huge Badaba Fire (which burns in the ocean's stomach). In that ocean of light, may the fish of our thoughts play for long as they please.

नाभीनालीकमूलादधिकपरिमलोन्मोहितानामलीनां
माला नीलेव यान्ती स्फुरति रुचिमती वक्त्रपद्मोन्मुखी या ।
रम्या सा रोमराजिर्महितरुचिकरी मध्यभागस्य विष्णोः
चित्तस्था मा विरंसीच्चिरतरमुचितां साधयन्ती श्रियं नः ॥ २७ ॥

27. நாபீநாலீகமூலாததிகபரிமலோன்மோஹிதாநாமலீநாம்
மாலா நீலேவ யாந்தீ ஸ்புரதி ருசிமதீ வக்த்ரபத்மோன்முகீ யா |
ரம்யா ஸா ரோமராஜிர் மஹிதருசிகரீ மத்யபாகஸ்ய விஷ்ணோஃ
சித்தஸ்தா மா விரம்ஸீச்சிரதரமுசிதாம் ஸாதயந்தீ ஶ்ரியம் நஃ ||

**नाभीनालीकसूलात्** நாபிகமலத்தின் அடிப்புறத்திலிருந்து **वक्त्रपद्मोन्मुखी** திருமுக மண்டலமாகிற தாமரையை நோக்கிச் செல்வதான **या** எந்த ரோமாவளி **अधिकपरिमलोन्मोहितानां** அதிகமான பரிமளத்திலே பேராவல் கொண்டவையான **अलीनां** வண்டுகளின் **नीलमाला** கரிய நிறமுடைய வரிசை **यान्ती इव** செல்வது போல **रुचिमती स्फुरति** அழகுவாய்ந்ததாக மிளிர்கின்றதோ, **रम्या** (ஸேவிப்பவர்களுடைய) மனதுக்கு இன்பம் தருவதும் **विष्णोः मध्यभागस्य** ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் இடைப் பிரதேசத்திற்கு **महितरुचिकरी** சிறந்த காந்தியைத் தருவதுமான **सा रोमराजिः** அந்த ரோமாவளியானது **उचितां श्रियं साधयन्ती** தகுந்த செல்வத்தை அளிப்பதாகி **नः चित्तस्था** நம்முடைய மனதிலே குடிகொண்டதாய் **चिरतरं मा विरंसीत्** வெகுகாலம் இடையறுமலிருப்பதாக.

வண்டுகள் ஒரு மலரிலுள்ள மதுவைப் பருகி மற்றொரு மலரை நோக்கிச் செல்வன. அப்படிச் செல்லும்போது வண்டுகளாலாகிய அவ்வரிசை கரிய மாலைபோல் தோன்றும். பகவானுடைய நாபிகமலத்தினின்று மேல் நோக்கி எழுகின்ற கரிய ரோமராஜியானது, உந்திக்கமலத்திலிருக்கும் வண்டுகள் பகவானுடைய முக கமலத்தின் நறுமணம் அதிகமாயிருப்பதால் அதைக் கொள்ளும் அவாவினுலே அதை நோக்கிச் செல்லும் வண்டுகளின் வரிசையைப்போல், விளங்குகின்றது. பகவானுடைய மத்திய பாகத்திற்கு ஓரழகைத் தருவதோடு காண்போர் மனதையும் கவரும் சக்திவாய்ந்த அந்த ரோமராஜி நம்முடைய மனதில் வெகு காலம் இடையறுது குடியிருந்து நமக்கு ஏற்ற செல்வத்தை அளிக்கவேணும்.

XXVII. The profuse growth of hair on Vishnu's chest shines like a glittering swarm of black bees which, attracted by the richer fragrance, make their way from the stem of His navel-lotus towards the lotus, His face. This

mass of hair is lovely to behold, shedding, as it does, a glorious lustre all around. May this mass of hair be for ever in our mind, giving us worthy riches.

**संस्तीर्णं कौस्तुभांशुप्रसरकिसलयैर्मुग्धमुक्ताफलाढ्यं**
**श्रीवासोल्लासि फुल्लप्रतिनववनमालाङ्कि राजद्भुजान्तम् ।**
**वक्षः श्रीवृक्षकान्तं मधुकरनिकरश्यामलं शार्ङ्गपाणेः**
**संसाराध्वश्रमार्तैरुपवनमिव यत्सेवितं तत्प्रपद्ये ॥ २८ ॥**

28. ஸம்ஸ்தீர்ணம் கௌஸ்துபாம்ஶு-ப்ரஸர-கிஸலயைர் முக்த-முக்தாபலாட்யம்
ஶ்ரீவாஸோல்லாஸி புல்லப்ரதிநவ-வனமாலாங்கி ராஜத்புஜாந்தம்|
வக்ஷ: ஶ்ரீவ்ருக்ஷகாந்தம் மதுகரநிகரஶ்யாமலம் ஶார்ங்கபாணே:
ஸம்ஸாராத்வஶ்ரமார்(த்)தைருபவனமிவ யத் ஸேவிதம் தத் ப்ரபத்யே ||

**कौस्तुभांशुप्रसरकिसलयैः संस्तीर्णं** கௌஸ்துபம் என்னும் மணியினுடைய கிரணங்களின் பரப்பாகிய தளிர்களால் (நான்கு பக்கங்களிலும்) அடர்த்தியாக இருப்பதும் **मुग्ध-मुक्ताफलाढ्यं** இயற்கை அழகுவாய்ந்த நன்முத்துக்களாலாகிய பழங்களால் நிரம்பியதும் **श्रीवासोल्लासि** லக்ஷ்மீ குடியிருப்பதாலே பிரகாசிப்பதும் **फुल्लप्रतिनववनमालाङ्कि** மலர்ந்த புது மலர்களான வநமாலை என்னும் புஷ்பஹாரத்தை அணிந்ததும் **राजद्भुजान्तं** சிறந்து விளங்குகின்ற தோள்க்ளின் அடிப்பாகமாகிற மரக்கிளைகளை யுடையதும் **श्रीवृक्षकान्तं** (சுழியால்) ஆவர்த்த விசேஷத்தால் (அச்வத்த மரங்களால்) அழகு வாய்ந்ததும் **मधुकरनिकरश्यामलं** வண்டுகளின் திரள்போல் (திரள்களால்) கருநிறமுடையதுமான **शार्ङ्गपाणेः** சார்ங்கமென்னும் வில்லைக் கையிலே கொண்ட ஸ்ரீ மஹாவிஷ்ணுவினுடைய **यत् वक्षः** எந்தத் திருமார்பானது **संसाराध्वश्रमार्तैः** ஸம்ஸாரமாகிற நெடுவழியிலே செல்வதால் உண்டான களைப்பினால் வருந்தியவர்களால் **उपवनम् इव** பூந்தோட்டத்

தைப்போல **सेवितं** சென்று சேரப்பெற்றதோ, **तत् वक्षः** அந்தத் திருமார்பை **प्रपद्ये** சரணமடைகிறேன்.

ஸ்ரீவ்ருக்ஷ:—ஒருவகைச் சுழி, அச்வத்தம்.

நெடுவழி நடந்து களைத்தவர்கள் சென்று சேர்ந்து களைப்பாறுதலுக்கு அமைந்தது, பூந்தளிர்கள் பழங்கள் மலர்ந்த பூக்கள் இவற்றை நாடிவரும் வண்டுகள் பரந்த கிளைகள் இவற்றால் மனோஹரமாயும் ச்ரமஹரமாயும் விளங்கும் உத்யானம்; வண்டினம்போல் கறுத்த பகவானுடைய திருமார்பானது கௌஸ்துபமணி, முத்துமாலை, வநமாலை, ஸ்ரீவத்ஸம் என்னும் மறு, ஆவர்த்தம் (சுழி), இவைகளின் பலவிதமான காந்திகளாலும் ஸ்ரீதேவியின் வாஸத்தாலும் அழகிய தோள்களாலும் அழகுபெற்று, ஸம்ஸாரத்தில் அடிகொதித்துத் தவிர்ப்பவர்களின் இளைப்பைத் தீர்ப்பதாகி அந்த உத்யான வனம்போல் விளங்குகின்றது. அத் திருமார்பு நமக்குப் புகலிடமாவதாக.

XXVIII. The broad chest of Vishnu (the Wielder of the Bow, Saruga) which shines attractive with curlmarks, is like an extensive pleasure garden (beside the highway). The abounding buds and tendrils in that garden are the flood of rays shed by the jewel Kaustubha (on Vishnu's chest); the mellow fruits are the delicate pearls (of His garland); Beauty (the goddess Lakshmi) resides there. His arms which branch therefrom are the branches of trees. And, like the garden, Vishnu's chest looks charming, with the clustering flowers of His garland Vanamala, ever fresh in their bloom. The chest has the darkness of a thick swarm of bees; and, like a garden, it is reached by those who are weary and worn out by the journey of Samsara (worldly existence). I take refuge in that Vishnu's chest.

**कान्तं वक्षो नितान्तं विदधदिव गलं कालिमा कालशत्रोः**
**इन्दोर्बिम्बं यथाऽङ्को मधुप इव तरोर्मञ्जरीं राजते यः ।**

**श्रीमान्नित्यं विधेयादविरलमिलितः कौस्तुभश्रीप्रतानैः**
**श्रीवत्सः श्रीपतेः स श्रिय इव दयितो वत्स उच्चैः श्रियं नः ॥**

29. காந்தம் வக்ஷோ நிதாந்தம் விதததிவ கலம் காலிமா காலஶத்ரோ:
இந்தோர்பிம்பம் யதா'ங்கோ மதுப இவ தரோர்மஞ்ஜரீம்ராஜதேய:|
ஶ்ரீமாந்நித்யம் விதேயாதவிரலமிலித: கௌஸ்துபஶ்ரீப்ரதாநை:
ஶ்ரீவத்ஸ: ஶ்ரீபதே: ஸ ஶ்ரிய இவ தயிதோ வத்ஸ உச்சை:
ஶ்ரியம் ந: ||

**कालशत्रोः** இயமனுக்கு விரோதியான சிவபிரானுடைய **गलं** கழுத்தை **कालिमा इव** (காலகூட விஷத்தாலுண்டான) கருநிறம்போலவும், **इन्दोः** சந்திரனுடைய **बिम्बं** பூர்ண மண்டலத்தை **अङ्कः यथा** களங்கம்போலவும் **तरोः** மரத்தின் **मञ्जरीं** பூங்கொத்தை **मधुपः इव** வண்டுபோலவும் **श्रीपतेः** ஶ்ரிய:பதியினுடைய **वक्षः** திருமார்பை **यः** எந்த ஸ்ரீ வத்ஸம் என்னும் மறுவானது **नितान्तं कान्तं विदधत्** மிகவும் அழகுடையதாகச் செய்துகொண்டு **राजते** விளங்குகின்றதோ, **कौस्तुभश्रीप्रतानैः** கௌஸ்துப மணியின் அழகிய ஒளித்தொகுதிகளாலே **अविरलमिलितः** இடைவெளி சிறிதுமின்றித் தழுவப்பெற்றதும் **श्रीमान्** செவ்வியுடையதும் **श्रियः** ஸ்ரீ தேவிக்கு **वत्सः इव दयितः** (தன்) பிள்ளையைப்போல அன்பைப் பெற்றதுமான **सः श्रीवत्सः** அந்த ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவானது **नः** நமக்கு **उच्चैः श्रियं** மேலான செல்வத்தை **नित्यं विधेयात्** எப்பொழுதும் அருளுவதாக.

பரமசிவனுடைய கழுத்திலே காலகூட விஷத்தை விழுங்கியதால் உண்டான கருநிறம்போலவும் சந்திரபிம்பத்தில் களங்கம்போலவும் பூங்கொத்தில் வண்டுபோலவும், எம்பெருமான் திருமார்பில் ஸ்ரீவத்ஸ மென்னும் மறு ஓரழகு செய்து சோபிக்கின்றது. அது கௌஸ்துபமணியின் கிரணங்களால் எப்போதும் சூழப்பெற்றது ; எம்பெருமான் திருமார்பில் நித்யவாஸஞ்செய்யும் பாக்கியத்தைப்பெற்றது ; ஸ்ரீதேவியின் செல்வக் குழந்தைபோல விளங்குவது.

அத் தகைய ஸ்ரீவத்ஸம் நமக்கு மேலான செல்வத்தை என்றும் தந்துகொண்டிருப்பதாக.

XXIX. The mole Srivatsa of Vishnu (Lakshmi's Lord) shines beautifying His chest immensely, even as the dark coloration (caused by the poison Kalakuta) beautifies the neck of Siva (Death's Destroyer), the dark spot the Orb of the Moon and the black bee the cluster of flowers on a tree. The mole is rich in lustre, its brilliance blending with the rich brilliance of the gem Kaustubha (on Vishnu's chest). And it is even like a darling child of Lakshmi (the goddess of Fortune). May that mole Srivatsa ever grant unto us good fortune in great profusion.

संभूयाम्भोधिमध्यात्सपदि सहजया यः श्रिया संनिधत्ते
नीले नारायणोरःस्थलगगनतले हारतारोपसेव्ये ।
आशाः सर्वाः प्रकाशा विदधदपिदधच्चात्मभासाऽन्यतेजां-
स्याश्चर्यस्याकरो नो द्युमणिरिव मणिः कौस्तुभः सोऽस्तु भूत्यै॥

30. ஸம்பூயாம்போதிமத்யாத்ஸபதி ஸஹஜயா யஃ ஶ்ரியா ஸந்நிதத்தே
நீலே நாராயணோரஃஸ்தலககனதலே ஹாரதாரோபஸேவ்யே |
ஆஶாஃ ஸர்வாஃ ப்ரகாஶா விதததபிதச்சாத்மபாஸான்'யதேஜாம்-
ஸ்யாஶ்சர்யஸ்யாகரோ நோ த்யுமணிரிவ மணிஃ கௌஸ்துபஃ
ஸோ'ஸ்து பூத்யை ||

**यः** எந்த கௌஸ்துபமானது **अम्भोधिमध्यात्** சமுத்திரத்தின் நடுவினின்றும் **सपदि** ஒரே ஸமயத்திலே **संभूय** தோன்றி **नीले** கருநிறமுடையதும் **हारतारोपसेव्ये** முத்துமாலைகள் என்னும் நக்ஷத்திரங்களால் சூழப்பெற்றிருப்பதுமான **नारायणोरःस्थलगगनतले** ஸ்ரீமந் நாராயணனுடைய வக்ஷஸ்தலம் என்னும் ஆகாசப் பரப்பிலே **सहजया श्रिया** உடன்பிறந்த தேவியோடு **संनिधत्ते** ஒருங்கே அமர்ந்து விளங்குகின்றதோ **आत्मभासा** (ஸ்வயம்ஜ்யோதியால்) தன்னுடைய காந்தியால் **सर्वाः आशाः प्रकाशाः विदधत्** எல்லாத்

திசைகளையும் பிரகாசமாகச் செய்துகொண்டும் **अन्यतेजांसि** மற்றைய ஜ்யோதிகளை **अपिदधत्** மறைத்துக்கொண்டும் **आश्चर्यस्य आकरः** ஆச்சர்யத்திற்கு உறைவிடமாக அமைந்துமுள்ள **सः कौस्तुभः मणिः** அந்த கௌஸ்துபம் என்னும் மணியணி **द्युमणिः इव** சூரியன்போல **नः** நம்முடைய **भूत्यै अस्तु** பெரு நலத்தின் பொருட்டு அமைவதாக.

கௌஸ்துபமணி ஸ்ரீதேவியுடன் பிறந்து ஸ்ரீதேவியுடன் வாழும் பாக்கியத்தைப் பெற்றது. நக்ஷத்திரங்களையுடையதான நீல வானத்திலே சூரியன் மற்ற சோதிகளையெல்லாம் மறைத்து, தன்னுடைய இயற்கையான சோதியையே எங்கும் பரப்பி ஆச்சரியமாக விளங்குவதுபோல, கௌஸ்துபமணியும் ஸ்ரீமந் நாராயணனுடைய நீலநிறமுடைய பரந்தகன்ற திருமார்பிலே திகழ்ந்து தன்னுடைய பேரொளியை எங்கும் பரப்புகின்றது. அத்தகைய கௌஸ்துபம் என்னும் அணி நமக்குப் பேரின்பத்தை அளிப்பதாக.

XXX. The gem Kaustubha was twin-born with its sister Lakshmi from the womb of the Ocean (of Milk), and, along with Her, it dwells, like the sun, in the heaven of Vishnu's (Narayana's) broad bosom. The gems of Vishnu's necklace are the stars in that heaven. And this Kaustubha, like the Sun, illumines the utmost ends of space (viz., Vishnu's bosom); and with its splendour hides the glory of all the other heavenly bodies (gems on His bosom). And, like the Sun, it is a source of great wonder. May that gem Kaustubha grant us, even like the Sun, everlasting welfare.

**या वायावानुकूल्यात्सरति मणिरुचा भासमानाऽसमाना**
**साकं साकम्पमंसे वसति विदधती वासुभद्रं सुभद्रम् ।**
**साऽरं सारङ्गसङ्घैर्मुखरितकुसुमा मेचकान्ता च कान्ता**
**माला मालालिताऽस्मान्न विरमतु सुखैर्योजयन्ती जयन्ती ॥ ३१ ॥**

31. யா வாயாவானுகூல்யாத் ஸரதி மணிருசா பாஸமானா' ஸமானா
ஸாகம் ஸாகம்பமம்ஸே வஸதி விதததீ வாஸுபத்ரம் ஸுபத்ரம் |
ஸா'ரம் ஸாரங்கஸங்கைர்முகரிதகுஸுமா மேசகாந்தா ச காந்தா
மாலா மாலாலிதா'ஸ்மான் ந விரமது ஸுகைர்யோஜயந்தீ ஜயந்தீ||

**या** எந்த வைஜயந்தி என்னும் மாலையானது **मणिरुचा साकम् असमाना भासमाना** மணிகளின் ஒளியோடு கூடி ஒப்பற்றதாக விளங்கிக்கொண்டும் **वासुभद्रं** வாஸுதேவனாகிய பகவானையும் **सुभद्रं** நன்மங்களங்களை யுடையவனாக **विदधती** செய்து கொண்டும் **वायौ आनुकूल्यात् सरति** காற்று அனுகூலமாக வீசும்போது **साकम्पं** மெல்ல அசைந்துகொண்டு **अंसे** அவனுடைய திருத்தோளிலே **वसति** வாழ்கின்றதோ, **सारङ्गसंघैः** வண்டுகளின் தொகுதிகளால் **मुखरितकुसुमा** ரீங்காரஞ் செய்யப்பட்ட புஷ்பங்களையுடையதாயும் **मेचकान्ता** (வண்டுகளால்) கரிய நிறமுடைய ஓரங்களையுடையதாயும் **मालालिता च** ஸ்ரீதேவியால் கொண்டாடப் பெற்றதாயும் விளங்கும் **जयन्ती** (வெற்றிமாலையாகிய) 'வைஜயந்தீ' என்னும் **सा कान्ता माला** அந்த அழகு வாய்ந்த மாலை **अरं** விரைவிலே **अस्मान्** நம்மை **सुखैः योजयन्ती** இன்பங்களோடு சேர்ப்பவளாகி **न विरमतु** என்றும் இடையறாதிருப்பதாக.

வைஜயந்தீ என்னும் மாலை, எம்பெருமான் திருத்தோளிலே மந்தமாருதம் வீச, அசைந்து திருவாபரணங்களுடைய காந்தியோடு கலந்து அப்பெருமானுக்கு அணியாகின்றது. வண்டுகள் ஜங்காரஞ் செய்துகொண்டு மாலையிலுள்ள பூக்களிலே மொய்த்துக்கொண்டிருப்பதால் மாலையின் வெளிப்புறம் கறுத்துத் தோன்றுகின்றது. அந்த அழகிய மாலையைக்கண்டு ஸ்ரீதேவி களிப்புறுகிறாள். அத்தகைய மாலை நமக்கு என்றும் நன்மை பயப்பதாக.

XXXI. May Jayanti, (the garland of Victory), be ever bringing us joys in quick succession! (For,) she is fondled by Lakshmi (the Goddess of Fortune); and wafted by the

favorable breeze, she lies active peerless in the splendour of her gems and (as a child) on Vishnu's (Vasudeva's) shoulders making it lovely. And she, too, is lovely to behold, with her flowers where murmuring swarms of bees repose, making her look as if she were covered with dark gems.

**हारस्योरुप्रभाभिः प्रतिनववनमालांशुभिः प्रांशुरूपैः**
**श्रीभिश्चाप्यङ्गदानां शबलितरुचि यन्निष्कभाभिश्च भाति ।**
**बाहुल्येनैव बद्धाञ्जलिपुटमजितस्याभियाचामहे तद्-**
**बन्धार्तिं बाधतां नो बहुविहतिकरीं बन्धुरं बाहुमूलम् ॥ ३२ ॥**

32. ஹாரஸ்யோருப்ரபாபி⁴꞉ ப்ரதிநவவனமாலாம்ஶுபி⁴꞉ ப்ராம்ஶுரூபை꞉
ஶ்ரீபி⁴ஶ்சாப்யங்கதா³னாம் ஶப³லிதருசி யந்நிஷ்கபா⁴பி⁴ஶ்ச பா⁴தி ।
பா³ஹுல்யேனைவ ப³த்³தா⁴ஞ்ஜலிபுடமஜிதஸ்யாபி⁴யாசாமஹே தத்-
ப³ந்தா⁴ர்(த்)திம் பா³த⁴தாம் நோ ப³ஹுவிஹதிகரீம் ப³ந்து⁴ரம் பா³ஹுமூலம் ॥

**यत्** எந்த பாஹுமூலம் **हारस्य** மாலையின் **उरुप्रभाभिः** பேரொளிகளாலும் **प्रांशुरूपैः प्रतिनववनमालांशुभिः** எப்போதும் புதியதான வனமாலையின் நெடிய வுருவங்களையுடைய ஒளிகளாலும் **अङ्गदानां श्रीभिः च अपि** தோள்வளைகளின் காந்திகளாலும் **निष्कभाभिः च** திருமார்புக்கு அணியான பதக்கங்களாலும் **शबलितरुचि** நானாவர்ணமாக்கப் பெற்ற காந்தியையுடையதாய் **भाति** விளங்குகின்றதோ, **अजितस्य** (யாவராலும் என்றும்) வெல்லவொண்ணாதவரான ஸ்ரீ மஹாவிஷ்ணுவினுடைய **तत् बन्धुरं बाहुमूलं** அந்த அழகிய பாஹுமூலமானது **नः** நமக்கு **बहुविहतिकरीं** பலவிதமான இடையூறுகளைச் செய்வதான **बन्धार्तिं** (ஸம்ஸாரமாகிய) பந்தத்தால் வரும் துயரத்தை **बाधतां** கடிவதாக (**इति** என்று) **बाहुल्येन** பல்வகையாலும் **बद्धाञ्जलिपुटम् एव** கைத்தலங்கள் அஞ்ஜலி செய்த வண்ணமாகவே **अभियाचामहे** விரும்பி வேண்டுகின்றோம்.

ஸம்ஸாரம் என்னும் பந்தங்கள் எல்லாம் நம்மைக் கட்டுப்படுத்தாதவாறு பிரிந்தொழியவேண்டும் என்ருல் வெற்றிப்போர் புரியும் பரமனுடைய பாஹுமூலத்தின் தயவு வேண்டும். அது பகவானுடைய திருமேனியிலே சாத்திய மாலைகளின் நீண்ட ஒளிக் கிரணங்களையும் தோள் வளை பதக்கம் முதலிய ஆபரணங்களின் ஒளித்திரளையும் கொண்டு பலவித வர்ணமுடையதாக விளங்குகின்றது; நமக்குப் பலவிதமான இடையூறுகளை உண்டுபண்ணும் இந்த ஸம்ஸார பந்தத்தை ஒழிக்க வேண்டுமென்று அத்தகைய பாஹுமூலத்தைக் கைகூப்பிய வண்ணமே பல்வகையாலும் வேண்டுகின்ருேம்.

XXXII. The region of Vishnu's (the Unconquerable One's) gleaming shoulders shines with diverse rich colors because of the rich pencils of rays shooting up from the garland of ever-fresh forest-flowers (of Vanamala), worn on His chest; and also because of the brilliance of the lovely armlets of burnished gold (on His arms). "May that handsome region of His shoulders which destroys much, destroy for our sake the sorrows of Samsara (worldly existence)." Thus do we pray incessantly and fervently, with the palms of our hands folded in adoration.

विश्वत्राणैकदीक्षास्तदनुगुणगुणक्षत्रनिर्माणदक्षाः
कर्तारो दुर्निरूपास्स्फुटगुणयशसां कर्मणामद्भुतानाम् ।
शार्ङ्गं बाणं कृपाणं फलकमरिगदे पद्मशङ्खौ सहस्रं
बिभ्राणाः शस्त्रजालं मम दधतु हरेर्बाहवो मोहहानिम् ॥ ३३ ॥

33. விஶ்வத்ராணைகதீக்ஷாஸ்ததனுகுணகுணக்ஷத்ரநிர்மாணதக்ஷா:
கர்(த்)தாரோ துர்நிரூபாஸ்ஸ்புடகுணயஶஸாம் கர்மணமத்புதானும்|
ஶார்ங்கம் பாணம் க்ருபாணம் பலகமரிகதே பத்மஶங்கௌ ஸஹஸ்ரம்
பிப்ராணு: ஶஸ்த்ரஜாலம் மம ததது ஹரேர்பாஹவோ மோஹஹானிம் ||

**विश्वत्राणैकदीक्षाः** உலகங்களைக் காப்பதற்கென்றே முக்கியமாக விரதம் பூண்டவைகளும் **तदनुगुणगुणक्षत्रनिर्माणदक्षाः** அவ்வாறு பாதுகாக்கும் விரதத்திற்கு அனுகுணமான குணங்களையுடைய க்ஷத்திரிய ஜாதியைப் படைக்குந் திறமை வாய்ந்தவைகளும் **दुर्निरूपाः** இப்படிப்பட்டவை, இத்தனை என்று யாராலும் கூறமுடியாதவைகளும் **स्फुटगुणयशसां** நன்றாக விளங்குபவையான நற்குணங்களையும் புகழையுமுடைய **अद्भुतानां कर्मणां कर्तारः** ஆச்சரியப்படும்படியான காரியங்களைச் செய்து முடிப்பவைகளும் **शार्ङ्गं** சார்ங்கம் என்னும் வில்லையும் **बाणं** பாணத்தையும் **कृपाणं** வாளையும் **फलकं** கேடயத்தையும் **अरिगदे** சக்கிரத்தையும் கதாயுதத்தையும் **पद्मशङ्खौ** தாமரை மலரையும் சங்கையும் **सहस्रं शस्त्रजालं** ஆயிரம் ஆயுதத்தொகுதியையும் **बिभ्राणाः** ஏந்தியவைகளுமான **हरेः** ஸ்ரீ ஹரியினுடைய **बाहवः** புஜங்கள் **मम मोहहानिं दधतु** என்னுடைய அஞ்ஞானத்தைப் போக்கியருளுவதாக.

கெட்ட காரியங்களைச் செய்யும் கொடிய அரக்கர்களை அழிப்பதற்காகவே பகவானுக்கு பத்மம், சங்கு, சக்கிரம், வாள், தண்டு, வில், கேடயம் முதலிய பல்லாயிரக் கணக்கான ஆயுதங்கள் கையிலே இருக்கின்றன. அவையெல்லாம் சேர்ந்தால் என்னுடைய அஞ்ஞானம் என்னும் பகைவனை அழிப்பது அரிதன்றே? உலகத்தையெல்லாம் ரக்ஷிப்பதென்று விரதம் பூண்டு அதற்கு அனுகுணமான க்ஷத்திரிய ஜாதியைத் தோற்றுவித்தும் ஆயுதங்களை ஏந்தியும் எண்ணிறந்த ஆனைத் தொழில்களைச் செய்தும் பெரும்புகழ் படைத்த பகவானுடைய திருக்கரங்கள் என் அஞ்ஞானத்தை ஒழிப்பனவாக.

XXXIII. May the (innumerable) thousand arms of Vishnu (Hari) which bear a multitude of weapons cause the utter destruction of my ignorance (delusion). (For,) they are solely intent on protecting the universe, and they have

shown great skill in creating the noble Kshattriya caste for that purpose. They have achieved wonderful deeds of valour which defy description and yet ring with fame. And they wield the bow Sarnga and arrow, sword, shield and discus, club, lotus and conch, and a thousand other weapons.

**कण्ठाकल्पोद्गतैर्यः कनकमयलसत्कुण्डलोत्थैरुदारैः**
**उद्योतैः कौस्तुभस्याप्युरुभिरुपचितश्चित्रवर्णो विभाति ।**
**कण्ठाश्लेषे रमायाः करवलयपदैर्मुद्रिते भद्ररूपे**
**वैकुण्ठीयेऽत्र कण्ठे वसतु मम मतिः कुण्ठभावं विहाय ॥ ३४ ॥**

34. கண்டாகல்போத்கதைர்யஃ கனகமயலஸத்குண்டலோத்தை-
ருதாரைஃ
உத்யோதைஃ கௌஸ்துபஸ்யாப்யுருபிருபசிதஶ்சித்ரவர்ணோ
விபாதி |
கண்டாஶ்லேஷே ரமாயாஃ கரவலயபதைர் முத்ரிதே பத்ரரூபே
வைகுண்டீயே'த்ர கண்டே வஸது மம மதிஃ குண்டபாவம் விஹாய ||

**यः** எந்தக் கழுத்தானது **कण्ठाकल्पोद्गतैः** கழுத்திலுள்ள ஆபரணங்களினின்று எழுந்தவைகளும் **कनकमयलसत्कुण्ड-लोत्थैः** பொன்மயமாய் ஒளி வீசுங் குண்டலங்களினின்று எழுந்தவைகளுமான **उदारैः उद्योतैः** அழகு மிகுந்த ஒளிகளாலும் **कौस्तुभस्य उरुभिः उद्योतैः अपि** கௌஸ்துப மணியின் பேரொளிகளாலும் **उपचितः** நிறைந்ததாய் **चित्रवर्णः** பல வகை வர்ணங்களையுடையதாய் **विभाति** விளங்குகிறதோ, **कण्ठाश्लेषे** (பகவானின்) கழுத்தைத் தழுவும்பொழுது **रमायाः** ஸ்ரீதேவியின் **करवलयपदैः** கைவளைகள் பதிந்த சுவடுகளால் **मुद्रिते** அடையாளமிடப் பெற்றதும் **भद्ररूपे** அழகிய தோற்றமுடையதுமான **वैकुण्ठीये अत्र कण्ठे** வைகுண்டநாதனுடையதான இந்தக் கழுத்தில் **मम मतिः** என் புத்தி **कुण्ठभावं विहाय** மழுங்குந் தன்மையைத் தவிர்த்து **वसतु** குடியிருப்பதாக.

பிரணய காலத்திலே ஸ்ரீ தேவி பகவானுடைய கழுத்தைக் கட்டி யணைக்கும் பொழுது, அக்கழுத்திலே பதிந்த

அவளுடைய கைவளைகளின் அடையாளங்கள் அலங்காரமா யிருப்பன. கழுத்தணிகளும் காதணிகளும் திருமார்பிலுள்ள கௌஸ்துப மணியும் பலவகை யொளிகளை வீசி அந்தக் கண்டத்தை விசித்திரமான வர்ணங்களை உடையதாகச் செய்கின்றன. இவ் வழகு வாய்ந்த கண்டத்தைக் கண்டு என் புத்தியானது மழுங்காத முழு உணர்ச்சியோடு ஈடு பட்டு அங்கே நிரந்தரம் வாழ்வதாக.

XXXIV. May my mind dwell for ever, free from all limitations, here in the region of Vishnu's (the Illimitable One's) neck. It gleams bright with the richness of varied colors from the luminous rays emanating from the jewels round the Lord's neck and from the profuse rays which shoot from the Kundalas of glittering gold (in Vishnu's ears) and from the exceedingly brilliant rays which shoot upward from the Kaustubha gem (on His chest). The neck looks all the more lovely, bearing as it does, the imprint of the bangles of Lakshmi's (Ramā's), arms as She clung to His neck.

**पद्मानन्दप्रदाता परिलसदरुणश्रीपरीताग्रभागः**
**कालेकाले च कम्बुप्रवरशशधरापूरणे यः प्रवीणः ।**
**वक्त्राकाशान्तरस्थस्तिरयति नितरां दन्ततारौघशोभां**
**श्रीभर्तुर्दन्तवासो द्युमणिरघतमोनाशनायास्त्वसौ नः ॥ ३५ ॥**

35. பத்மானந்தப்ரதாதா பரிலஸதருண-ஸ்ரீபரீதாக்ரபாகஃ
காலேகாலே ச கம்புப்ரவரஶஶதராபூரணே யஃ ப்ரவீணஃ |
வக்த்ராகாஶாந்தரஸ்தஸ்திரயதி நிதராம் தந்ததாரௌகஶோபாம்
ஸ்ரீபர்(த்)துர்தந்தவாஸோ த்யுமணிரகதமோநாஶநாயாஸ்த்வஸௌ நஃ ||

**पद्मानन्दप्रदाता** ஸ்ரீதேவிக்கு (தாமரைக்கு) ஆனந்தத்தை யளிப்பதும் **परिलसदरुण-श्रीपरीताग्रभागः** நாற்புறமும் ஒளி விடுகின்ற சிவந்த காந்தியாலே (அருணனுடைய காந்தி

யாலே) நிறைந்த மேற்புறத்தை யுடையதும் **कालेकाले च** அந்தந்த வேளைகளிலே **कम्बुप्रवरशशधरापूरणे प्रवीणः** சங்க ராஜமாகிய சந்திர மண்டலத்தை நிறைப்பதிலே திறமுடையதுமான **यः** எந்த உதடு ஆகிய சூர்யன் **वक्त्राकाशान्तरस्थः** திருமுக மண்டலமாகிய ஆகாசத்தின் மத்தியிலே விளங்குவதாய் **दन्ततारौघशोभां** பற்களாகிய நக்ஷத்திரங்களின் சோபையை **नितरां** நன்கு **तिरयति** மறைத்து விடுகின்றதோ, **असौ** இந்த **श्रीभर्तुः** ஸ்ரீய:பதியான பகவானுடைய **दन्तवासो-द्युमणिः** உதடு என்னும் சூரியன் **नः** நம்முடைய **अघतमोनाशनाय अस्तु** பாபங்களாகிய இருளை முற்றும் அழிப்பதிற்காகுக.

சூரியன் உதிக்குமுன் அருணனால் வானம் செவ்வியதாய் விளங்கும். சூரியன் உதித்ததும் நக்ஷத்திரங்களின் ஒளி மங்கிவிடும்; தாமரை மலர்ந்து இன்புறும்; இருள் நீங்கிவிடும். சந்திரனைக் கலைகளால் நிரம்பும்படி செய்பவனும் அச்சூரியனே. இதேபோல, பகவானுடைய ஆகாசம் போன்ற திருமுக மண்டலத்தின் நடுவே விளங்கும் திருவதாமும் தன் அருண கிரணங்களாலே முன் பாகத்தை செவ்வியதாக்கும்; நக்ஷத்திரம்போன்ற பற்களின் காந்தியை மறைக்கும்; ஸ்ரீதேவிக்கு இன்பமளிக்கும்; சங்கராஜனை அவ்வப்போது பூரணஞ் செய்யும். இத்தகைய திருவதரமாகிய சூரியன் நம்முடைய பாபமாகிய இருளை நீக்குவதாக.

XXXV. May these rounded lips of Vishnu (Lakshmi's Lord) destroy, like the Sun, the darkness of our sins. These lips give joy to Lakshmi, just as the Sun to the lotus. They are tinged with a lovely red glow, just as the sky at sunrise is tinged with the ruddy splendour of Dawn (Sun's charioteer). And like the sun filling the moon with beams of light (on new moon days), the rounded lips fill (with sound), from time to time, the moon-white conch (Panchajanya). And, shining in Vishnu's face, these lips completely hide,

by their dazzling lustre, the brilliance of His teeth, even as the Sun in mid-heavens deprives the clustering stars of their light.

नित्यं स्नेहातिरेकान्निजकमितुरलं विप्रयोगाक्षमा या
वक्त्रेन्दोरन्तराले कृतवसतिरिवाभाति नक्षत्रराजिः ।
लक्ष्मीकान्तस्य कान्ताकृतिरतिविलसन्मुग्धमुक्तावलिश्रीः
दन्तालीं सन्ततं सा नतिनुतिनिरतानक्षतान् रक्षतान्नः ॥ ३६ ॥

36. நித்யம் ஸ்நேஹாதிரேகான்நிஜகமிதுரலம் விப்ரயோகாக்ஷமா யா
வக்த்ரேந்தோரந்தராலே க்ருதவஸதிரிவாபாதி நக்ஷத்ரராஜி: |
லக்ஷ்மீகாந்தஸ்ய காந்தாக்ருதிரதிவிலஸந்முக்தமுக்தாவலிஸ்ரீ:
தந்தாலீ ஸந்ததம் ஸா நதிநுதிநிரதானக்ஷதான் ரக்ஷதாந் ந: ||

**या** எந்த பல் வரிசையானது **स्नेहातिरेकात्** காதல் மிகுந்திருப்பதால் **निजकमितुः** தன் காதலனிடமிருந்து **विप्रयोगाक्षमा** பிரிவைப் பொறுக்க முடியாததாய் **वक्त्रेन्दोः** திருமுக மண்டலமாகிய சந்திரனுடைய **अन्तराले** இடையிலேயே **नित्यं** எப்பொழுதும் **कृतवसतिः** வாஸஞ் செய்வதான **नक्षत्रराजिः इव** நக்ஷத்திர வரிசைபோல **अलम् आभाति** அழகாக விளங்குகின்றதோ **सा** அந்த **कान्ताकृतिः** மனதைக் கவரும் அழகு வாய்ந்த வடிவமுடையதும் **अतिविलसन्मुग्धमुक्तावलिश्रीः** பிரகாசமுடையதாய் இயற்கை யழகு வாய்ந்த முத்துக் கோவையின் காந்தியை விஞ்சியதுமான **लक्ष्मीकान्तस्य** ஸ்ரீ தேவியின் காதலரான மஹாவிஷ்ணுவின் **सा दन्ताली** அந்தப் பல் வரிசையானது **नतिनुतिनिरतान्** வணங்குவதிலும் துதிப்பதிலும் ஊக்கமுடைய **नः** நம்மை **सततम् अक्षतान्** எப்பொழுதும் கேடுறுதவர்களாக **रक्षताम्** பாதுகாப்பதாக.

மஹா விஷ்ணுவின் பல்வரிசை நன்முத்துக் கோவை போல இயற்கை யழகுடன் விளங்குவது. சந்திரனைவிட்டுப் பிரியமாட்டாத நக்ஷத்திர வரிசையானது அந்த சந்திரனுடைய மடியிலேயே எப்போதும் அமர்ந்திருப்பதைப் போல, அந்த நக்ஷத்திர வரிசையைப் போல பிரகாசிக்கும்.

பல் வரிசையும் திருமுக மண்டலமாகிய சந்திரனுடைய மத்திய பாகத்திலேயே எப்போதும் அமர்ந்திருக்கின்றது; இந்தக் கோவையானது தன்னைத் துதித்து வணங்கும் நம்மை கேடுறுமல் அக்ஷதமாகக் காப்பதாக.

XXXVI. May the row of Vishnu's (Lakshmikanta's) teeth ever guard us who are intent on worship and praise, and ever keep us unharmed and whole! The row of His teeth is attractive in appearance, shining like a very brilliant necklace of lovely pearls. Always nestling in the bosom of Vishnu's face, the row of His teeth resembles the cluster of stars (Rohini) who rests on the lap of her lover, the Moon, quite unable, because of her excessive love for him, to bear separation from him.

**ब्रह्मन् ब्रह्मण्यजिह्मां मतिमपि कुरुषे देव संभावये त्वां**
**शंभो शक्र त्रिलोकीमवसि किममरैर्नारदाद्याः सुखं वः ।**
**इत्थं सेवावनम्रं सुरमुनिनिकरं वीक्ष्य विष्णोः प्रसन्न-**
**स्यास्येन्दोरास्रवन्ती वरवचनसुधा ह्लादयेन्मानसं नः ॥ ३७ ॥**

37. ப்ரஹ்மன் ப்ரஹ்மண்யஜிஹ்மாம் மதிமபி குருஷே தேவ ஸம்-
பாவயே த்வாம்
ஶம்போ ஶக்ர த்ரிலோகிமவஸி கிமமரைர் நாரதாத்யாஃ
ஸுகம் வஃ ।
இத்தம் ஸேவாவநம்ரம் ஸுரமுனிநிகரம் வீக்ஷ்ய விஷ்ணோஃ
ப்ரஸன்ன-
ஸ்யாஸ்யேந்தோராஸ்ரவந்தி வரவசனஸுதா ஹ்லாதயேந்-
மானஸம் நஃ ॥

**ब्रह्मन्** பிரும்மாவே! **ब्रह्मणि** வேதத்திலே **अजिह्मां** நேர்மையான **मतिं** புத்தியை **अपि कुरुषे** செலுத்துகிறீரா? **देव शंभो** சம்புதேவனே! **त्वां** உம்மை **संभावये** கௌரவிக்கிறேன். **शक्र** இந்திரனே! **अमरैः** தேவர்களோடு **त्रिलोकीं** மூவுலகத்தையும் **अवसि किं** பாதுகாக்கிறீரா? **नारदाद्याः** நாரதர் முதலியவர்

களே! **वः सुखं** நீங்கள் சுகமா? **इत्थं** இவ்வாறு **सेवावनम्रं** அடி பணிந்து வணங்கும் **सुरमुनिनिकरं** தேவர்கள் முனிவர்கள் ஆகியவர்களின் கூட்டத்தை **वीक्ष्य** நோக்கி **प्रसन्नस्य विष्णोः** மகிழ்ச்சியடைந்த மஹாவிஷ்ணுவினுடைய **आस्येन्दोः** முகமாகிய சந்திரனிடமிருந்து **आस्रवन्ती** பெருகுகிற **वरवचनसुधा** சிறந்த சொற்களான அமுதமானது **नः मानसं** நம்முடைய மனதை **ह्लादयेत्** இன்புறச் செய்வதாக.

தம்மை ஸேவிக்கவந்த பிரமன்முதலியவர்களை நோக்கிக் களிப்புடன் அவ்வவர்களுடைய பதவிக்கு ஏற்றவாறு பேசும் அமிர்ததாரை போன்ற பேச்சுகளில் நம்முடைய மனதும் ஈடுபட்டு மகிழ்ச்சியுறுவதாக. சந்திரன் அமிர்த கலசத்தை வைத்துக்கொண்டிருக்கிறுன் ஆதலால், அவனிடமிருந்து அமிர்தம் தாரைதாரையாகப் பொழியும்; அது போல பகவானுடைய திருமுக மண்டலமாகிற சந்திரனிடமிருந்து வசனங்களாகிற அமிர்ததாரை பெருகி எல்லோரையும் இன்புறுத்துகின்றது.

XXXVII. "O Brahma! Do you pay fit attention to the Vedas?", "I honor you, O God Sambhu!", "Indra! Do you, with the Gods, support the three worlds?", "Narada! And all of you, sages! Are you well?"—Thus, like nectar flowing from the Moon, noble words flow from gracious Vishnu's mouth, on seeing the crowd of Gods and sages bend down (before Him) in worship. May the nectar of these noble words gladden our hearts!

**कर्णस्थस्वर्णकम्रोज्ज्वलमकरमहाकुण्डलप्रोतदीप्यन्-**
**माणिक्यश्रीप्रतानैः परिमिलितमलिश्यामलं कोमलं यत् ।**
**प्रोद्यत्सूर्यांशुराजन्मरकतमुकुराकारचोरं मुरारेः**
**गाढामागामिनीं नः शमयतु विपदं गण्डयोर्मण्डलं तत् ॥ ३८॥**

38. கர்ணஸ்தஸ்வர்ணகம்ரோஜ்ஜ்வலமகரமஹாகுண்டல-ப்ரோததீப்யன்-
மாணிக்யஶ்ரீப்ரதானைஃ பரிமிலிதமலிஶ்யாமலம் கோமலம் யத் |
ப்ரோத்யத்ஸூர்யாம்ஶுராஜன்-மரகதமுகுராகாரசோரம் முராரேஃ
காடாமாகாமினீம் நஃ ஶமயது விபதம் கண்டயோர் மண்டலம் தத் ||

**कर्णस्थ-स्वर्ण-कम्रोज्ज्वल-मकरमहाकुण्डल-प्रोतदीप्यन्माणिक्यश्री-प्रतानैः** காதுகளிலே பொன்னால் அழகியதாய் ஒளிவீசுவதான மகரகுண்டலங்களிலே கோக்கப்பெற்று ஒளிரும் மாணிக்கங்களினுடைய காந்தி ஸமூகங்களால் **परिमिलितं** எங்கும் சூழப்பெற்றதாயும் **अलिश्यामलं** வண்டுகள்போலக் கருநிறமுடையதாயும் **कोमलं** செவ்வியதாயுமுள்ள **यत्** எந்த கண்டமண்டலமானது (கன்னமானது) **प्रोद्यत्सूर्यांशुराजन्मरकतमुकुराकारचोरं** முற்றும் உதயமாகிய சூரியமண்டலத்தின் கிரணங்கள் ஒளிர்வதால் பிரகாசிக்கும் மரகதக் கண்ணாடியின் உருவத்தைக் கொள்ளைகொள்வதா யுள்ளதோ **मुरारेः** முரன் என்னும் அசுரனுக்குப் பகைவனான பகவானுடைய **तत् गण्डयोः मण्डलं** அந்த இரண்டு கதுப்புகளின் மண்டலம் **नः** நமக்கு **आगामिनीं** வருவதாகவுள்ள **गाढां विपदं** பேராபத்தை **शमयतु** நீக்குவதாக.

இயற்கையாகவே வண்டுபோல் கரியதாக விளங்கும் பகவானுடைய கன்ன (கண்ட) ப்பிரதேசம் காதுகளிலுள்ள மகரகுண்டலங்களில் அமைத்த ரத்னங்களின் மிகுந்த ஒளியைப்பெற்று பேரழகுவாய்ந்து ப்ரௌடமான சூரியகிரணங்கள் பிரதிபலிக்கப்பெற்ற மரகத மயமான கண்ணாடியின் அழகைக் கொள்ளைகொள்வதுபோல் விளங்கும். அத்தகைய கண்டமண்டலம் (அக் கன்னபாகம்) நம்மைத் தாக்கவரும் விபத்துகளைத் தொலைப்பதாக.

XXXVIII. The pair of Vishnu's (Murari's) cheeks look lovely like dark bees. Their dark glow mingles with the spreading radiance of the brilliant rubies set in the big

makara-shaped Kundalas of gold which shine brilliantly in His ear-lobes. And these cheeks outshine, by their splendour, the emerald mirror lit by the radiance of the rising Sun. May that pair of cheeks dispel from us the dense darkness of approaching sorrow.

**वक्त्राम्भोजे लसन्तं मुहुरधरमणिं पक्वबिम्बाभिरामं**
**दृष्ट्वा दष्टुं शुकस्य स्फुटमवतरतस्तुण्डदण्डायते यः ।**
**घोणः शोणीकृतात्मा श्रवणयुगलसत्कुण्डलोस्रैर्मुरारेः**
**प्राणाख्यस्यानिलस्य प्रसरणसरणिः प्राणदानाय नः स्यात् ॥३९॥**

39. வக்த்ராம்போஜே லஸந்தம்முஹுரதரமணிம் பக்வபிம்பாபிராமம்
த்ருஷ்ட்வா தஷ்டும் ஶுகஸ்ய ஸ்புடமவதரதஸ்துண்டதண்டா-
யதே ய: |
கோண: ஶோணீக்ருதாத்மா ஶ்ரவணயுகலஸத்குண்டலோஸ்-
ரைர் முராரே:
ப்ராணாக்யஸ்யானிலஸ்ய ப்ரஸரணஸரணி: ப்ராணதானாய ந:
ஸ்யாத் ||

**मुरारेः** முராரியாகிய பகவானுடைய **वक्त्राम्भोजे** தாமரை போன்ற முகத்திலே **श्रवणयुगलसत्कुण्डलोस्रैः** காதுகள் இரண்டிலும் பிரகாசிக்கும் (ரத்ன) குண்டலங்களினுடைய கிரணங்களால் **शोणीकृतात्मा** சிவந்த நிறமுடையதாகிய **यः** எந்த மூக்கு **पक्वबिम्बाभिरामं लसन्तं** பழுத்த கோவைக் கனி போல் அழகுவாய்ந்து விளங்கும் **अधरमणिं** சிறந்த உதட்டை **दृष्ट्वा** பார்த்து **दष्टुं** (அந்தக் கோவைக்கனியைக்) கொத்துவதற்கு **अवतरतः शुकस्य** கீழ் நோக்கி வருகின்ற கிளியின் **तुण्डदण्डायते** அலகாக விளங்குகின்றதோ, **स्फुटं** நிச்சயம்; **प्राणाख्यस्य अनिलस्य प्रसरणसरणिः** பிராணன் என்னும் பெயருடைய காற்று நடமாடுவதற்கு அமைந்த வழியாகிய **(सः)** **घोणः** (அந்த) திருமூக்கானது **नः** நமக்கு **प्राणदानाय स्यात्** (பக்தி யென்னும்) உயிரை யளிப்பதாக.

பகவான் பச்சைமாமலை போன்ற மேனியன், பவள வாயன்; அவனுடைய திருமுக மண்டலத்திலே எடுப்பாக அமைந்திருக்கும் திருமூக்கு திருச் செவியிலே யணிந்த ரத்ன குண்டலங்களின் காந்தியாற் சிவந்து விளங்கி, தன் அலகால் திருவதரம் என்னும் கோவைக் கனியைக் கொத்த வரும் கிளிபோன்றிருக்கும். உள்ளும் புறமுமாய் சஞ்சரிக்கும் பிராண வாயுவிற்கு நடைவழிபோன்ற அத் திருமூக்கு, பக்தி என்னும் பிராணனை நமக்கு அளித்துக் காப்பதாக.

XXXIX. Vishnu's (Murari's) nose, which is prominent in His lotus-face, is indeed like the beak of a (green) parrot bent down to pluck at the ripe Bimba fruit of His lovely lips. For, it is red with the rich radiance of Kundalas (ear-ornaments) which shine in His ear-lobes. May that nose, which serves as a passage for the Prana (the vital breath), give us everlasting Life (of devotion).

दिक्कालौ वेदयन्तौ जगति मुहुरिमौ संचरन्तौ रवीन्दू
त्रैलोक्यालोकदीपावभिदधति ययोरेव रूपं मुनीन्द्राः ।
अस्मानब्जप्रभे ते प्रचुरतरकृपानिर्भरं प्रेक्षमाणे
पातामाताम्रशुक्लासितरुचिरुचिरे पद्मनेत्रस्य नेत्रे ॥ ४० ॥

40. திக்காலௌ வேதயந்தௌ ஜகதி முஹுரிமௌ ஸஞ்சரந்தௌ ரவீந்தூ
த்ரைலோக்யாலோகதீபாவபிதததி யயோரேவ ரூபம் முனீந்த்ராஃ|
அஸ்மானப்ஜப்ரபே தே ப்ரசுரதரக்ருபாநிர்பரம் ப்ரேக்ஷமாணே
பாதாமாதாம்ரஶுக்லாஸிதருசிருசிரே பத்மநேத்ரஸ்ய நேத்ரே ||

जगति உலகிலே दिक्कालौ திசையையும் காலத்தையும் वेदयन्तौ அறிவிப்பவர்களாயும் मुहुः (அடிக்கடி) மாறி மாறி संचरन्तौ சஞ்சரிப்பவர்களாயும் त्रैलोक्यालोकदीपौ इव மூவுலகங்களுக்கும் காண்பதற்கு ஒளி தருகின்ற திரு விளக்குகளைப் போன்றவர்களாயுமுள்ள इमौ रवीन्दू இந்த

சூர்ய சந்திரர்களை **ययोः** எந்த இரண்டு கண்களின் **रूपम् एव** தோற்றமாகவே **मुनीन्द्राः** முனிச் சிரேஷ்டர்கள் **अभिदधति** சொல்கிறார்களோ, **अब्जप्रभे** தாமரை போன்று ஒளியுடையவையும் **आताम्रशुक्लासितरुचिरुचिरे** சிறிது சிவந்தும் வெளுத்தும் கறுத்தும் இருக்கின்ற பிரகாசத்தால் அழகு வாய்ந்தவையும் **प्रचुरतरकृपानिर्भरं** மிகவும் அதிகமாகப் பொழியும் கிருபையால் நிறைந்து **प्रेक्षमाणे** நோக்குபவையுமான **ते पद्मनेत्रस्य नेत्रे** தாமரைக் கண்ணனை ஸ்ரீமந் நாராயணனுடைய அந்த இரண்டு கண்களும் **अस्मान्** நம்மை **पाताम्** காப்பதாக.

சூர்ய சந்திரர்களே பகவானுடைய திருக்கண்கள் என்று முனிவர்கள் கூறுகின்றார்கள். அவர்களே லோக ஸ்திதிக்குக் காரணம்; இரவு, பகல், நாள், மாதம், வருஷம் முதலிய பாகுபாடுகளுக்கும் கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு என்னும் திக்வேறுபாடுகளுக்கும் காரணம். சிறிது சிவந்தும் வெளுத்தும் கறுத்தும் விளங்கும் தாமரைபோன்ற அச் செந்தாமரைக் கண்ணனுடைய கண்கள் அருள் நிரம்பிய பார்வைகளால் நம்மைக் காப்பனவாக.

XL. May the pair of Vishnu's (of the Lotus-eyed One's) eyes protect us! They are in form, the great sages say, the Sun and the Moon, which shine, peerless twin-lamps, lighting the three worlds and which, constantly traversing the world, create both Time and Direction. These eyes have the splendour of lotuses; and their look is full of overflowing grace; and they shine lovely with the mingled loveliness of red, white and black.

पातात् पातालपातात् पतगपतिगतेर्भ्रूयुगं भुग्नमध्यं
येनेषच्चालितेन स्वपदनियमिताः सासुरा देवसङ्घाः ।
नृत्यल्लालाटरङ्गे रजनिकरतनोरर्धखण्डावदाते
कालव्यालद्वयं वा विलसति समया वालिकामातरं नः ॥ ४१ ॥

41. பாதாத் பாதாலபாதாத் பதகபதிகதேர் ப்ரூயுகம் புக்னமத்யம்
யேனேஷச்சாலிதேன ஸ்வபதநியமிதாஃ ஸாஸுரா தேவஸங்காஃ |
ந்ருத்யல்லாலாடரங்கே ரஜனிகரதனோரர்தகண்டாவதாதே
காலவ்யாலத்வயம் வா விலஸதி ஸமயா வாலிகாமாதரம் நஃ ||

**ईषच्चालितेन येन** சற்றே அசைக்கப்பெற்ற எந்த இணைப் புருவத்தால் **सासुराः देवसङ्घाः** அசுரர்களுடன்கூடிய தேவர்களின் கூட்டங்கள் **स्वपदनियमिताः** தங்கள் தங்கள் பதவிகளிலே ஏவப்பெற்றவர்கள் ஆகின்றார்களோ), **यत्** எந்த புருவங்கள் இரண்டும் **रजनिकरतनोः** சந்திரமண்டலத்தின் **अर्धखण्डावदाते** பாதிப்பாகத்தைப்போல வெளுத்திருக்கிற **लालाटरङ्गे** நெற்றியாகிய நடனமேடையிலே **वालिकामातरं समया** (பாம்பு வடிவம் போன்ற) வாளி என்னும் கர்ணாபரணமாகிய தாயின் பக்கத்தில் **नृत्यत्** நடனஞ் செய்யும் **कालव्यालद्वयं वा** கருநாகங்கள் இரண்டினைப்போல **विलसति** விளங்குகின்றதோ, **पतगपतिगतेः** பக்ஷிராஜன்மீது ஏறிச்செல்லும் ஸ்ரீமந் நாராயணனுடைய (**तत्**) **भुग्नमध्यं भ्रूयुगं** (அந்த) வளைந்த இடைப் பாகத்தையுடைய இணைப்புருவம் **पातालपातात्** பாதாளத்தில் (நரகத்தில்) விழுவதினின்றும் **नः पातात्** நம்மைக் காப்பதாக.

கருடவாஹனனை பகவானுடைய காதுகளில் விளங்கும் வாளி என்னும் காதணி குண்டலாகாரமான பாம்பின் வடிவுபோலிருக்கும். அதன் அருகிலே கரும் பாம்புபோல் இரண்டு புருவங்களும் தோன்றும். அஷ்டமீ சந்திரன்போல் விளங்கும் நெற்றியாகிய மேடையிலே தாயின் அருகிலே நடனமாடும் கரும்பாம்புகள் போல அசைகின்றன இந்தப் புருவங்கள். அவை நெறித்தலின் கருத்தை யறிந்து, தேவர்களும் அசுரர்களும் அவரவர் களுக்கு ஏற்றவாறு நடந்து கொள்வார்கள். பகவானுடைய அத்தகைய பெருமை வாய்ந்த புருவங்கள் நம்மை நரகப்படு குழியில் வீழாதவாறு காப்பனவாக.

XLI. The twin eye-brows of Vishnu (whose vehicle is Garuda, the king of birds) form one curved line parted in the middle. At their slightest twitch, the hosts of the Devas along with the Asuras are assigned to their respective places. And they shine like a pair of dark serpent girls dancing in the presence of their mother (the serpent-shaped ear-ornament) Valika, in the theatre of His forehead, which gleams white like a half-moon. May that pair of eye-brows save us from falling down to Hell (Patala).

लक्ष्माकारालकालिस्फुरदलिकशशाङ्कार्धसंदर्शमीलन्-
नेत्राम्भोजप्रबोधोत्सुकनिभृततरालीनभृङ्गच्छटाभे ।
लक्ष्मीनाथस्य लक्ष्यीकृतविबुधगणापाङ्गबाणासनार्ध-
च्छाये नो भूरिभूतिप्रसवकुशलते भ्रूलते पालयेताम् ॥ ४२ ॥

42. லக்ஷ்மாகாராலகாலிஸ்புரதலிகஶஶாங்கார்த-ஸம்தர்ஶமீலந்-
நேத்ராம்போஜப்ரபோதோத்ஸுக-நிப்ருததராலீன-ப்ருங்கச்சடா-
பே ।
லக்ஷ்மீநாதஸ்ய லக்ஷ்யீக்ருத-விபுதகணாபாங்க-பாணாஸனார்த-
ச்சாயே நோ பூரிபூதிப்ரஸவகுஶலதே ப்ரூலதே பாலயேதாம் ॥

**लक्ष्माकारालकालि - स्फुरदलिक - शशाङ्कार्ध - संदर्श - मीलन्नेत्राम्भोज- प्रबोधोत्सुक-निभृततरालीन-भृङ्गच्छटाभे** அடையாளங்களாக அமைந்த முன்னுச்சி மயிர்க்கற்றைகளால் அழகாக விளங்கும் நெற்றியாகிய அர்த்த சந்திரனைக் காண்பதால் கூம்பிய கண்களாகிய தாமரை மலர்கள் மலர்வதை ஆவலுடன் எதிர்பார்த்து மிகவும் நெருக்கமாகக் கவிந்து கிடக்கும் வண்டுகளின் வரிசையைப்போல விளங்குபவையும் **लक्ष्यीकृत-विबुधगणापाङ्ग-बाणासनार्धच्छाये** இலக்காகச் செய்யப்பட்ட தேவர்களின் கூட்டங்களின்மீது எய்யும் கடாக்ஷங்கள் என்னும் அம்புகளையுடைய வில்லின் இரு பகுதிகளைப்போன்று காந்தி யுடையவையும் **भूरिभूतिप्रसवकुशलते** மிகுதியாக ஐசுவரியங்களை அளிக்கும் திறமை வாய்ந்தவையு

மான **लक्ष्मीनाथस्य भ्रूलते** ஶ்ரிய: பதியின் லதைபோன்ற புருவங்கள் **नः पालयेताम्** நம்மைக் காப்பனவாக.

பகவானுடைய புருவங்கள் இரண்டும் கற்பகக் கொடிகளைப்போல நமக்கு வேண்டிய செல்வங்களை யெல்லாம் கொடுப்பவை. அவற்றையே வில்லாகக்கொண்டு தன் கடாக்ஷங்கள் என்னும் அம்புகளை தன் அருளை வேண்டிக் காத்திருக்கும் தேவகணங்களின்மீது பகவான் எய்கிறார்; அதாவது, தேவர்களைக் கடாக்ஷிக்கிறார். பகவானுடைய யோக நித்திரையிலே முகுளிதமான கண்கள் நெற்றியாகிய அர்த்த சந்திர மண்டலத்தைக் கண்டு கூம்பிய தாமரைகள் போன்றிருப்பன; அப்போது இந்தப் புருவங்கள் 'அந்தத் தாமரைகள் எப்போது மலருமோ' என்று ஒழுங்காகவும் நெருக்கமாகவும் ஆவலோடிருக்கும் வண்டினங்களைப்போல்வனவாம்; அத்தகைய புருவங்கள் நம்மை ரக்ஷிப்பனவாக.

XLII. The two creeper-like eyebrows of Vishṅu (Lakshmi's Lord) shine like two rows of bees which linger, awaiting with great eagerness the opening of the lotuses of His eyes which have closed at the sight of His forehead which, with curling locks of hair as black spots, shines like the half-moon. They look like the two halves of the bow whence His arrow-like glances (of grace) are aimed at the hosts of the Devas; and they are able to yield bountiful wealth. May they succour us.

**रूक्षस्मारेक्षुचापच्युतशरनिकरक्षीणलक्ष्मीकटाक्ष-**
**प्रोत्फुल्लत्पद्ममालाविलसितमहितस्फाटिकेशानलिङ्गम् ।**
**भूयाद्भूयो विभूत्यै मम भुवनपतेर्भ्रूलताद्वन्द्वमध्यात्**
**उत्थं तत्पुण्ड्रमूर्ध्वं जनिमरणतमःखण्डनं मण्डनं च ॥ ४३ ॥**

43. ருக்ஷஸ்மாரேக்ஷு-சாபச்யுத-ஶரநிகர க்ஷீண-லக்ஷ்மீகடாக்ஷ-
ப்ரோத்புல்லத்பத்மமாலா-விலஸித-மஹித-ஸ்பாடிகேஶான-
லிங்கம் ।

பூயாத்பூயோ விபூத்யை மம புவனபதேர் ப்ரூலதாத்வந்த்வமத்யாத்
உத்தம் தத் புண்ட்ரமூர்த்வம் ஜனிமரணதமஃகண்டனம் மண்டனம் ச ॥

रूक्षस्मारेक्षुचाप-च्युतशरनिकर-क्षीण-लक्ष्मीकटाक्ष-प्रोत्फुल्लत्पद्म-मालाविलसितमहित-स्फाटिकेशानलिङ्गम् கொடியோனான மன்மதனுடைய கரும்பு வில்லினின்று விழுந்த அம்புகளின் தொகையால் இளைப்படைந்த லக்ஷ்மியின் கடாக்ஷங்கள் என்னும் நன்கு மலர்ந்த தாமரை மாலையைச் சாத்தியதால் மகிழ்விக்கப்பெற்ற பரமசிவனுடைய ஸ்படிகமயமான லிங்கவடிவு கொண்டதும் जनिमरणतमःखण्डनं பிறப்பு இறப்பு என்னும் இருளை நாசஞ் செய்வதுமான भुवनपतेः லோகநாதனை பகவானுடைய भ्रूलताद्वन्द्वमध्यात् புருவக் கொடிகள் இரண்டிற்கும் இடையிலிருந்து उत्थं मण्डनं च மேலெழுந்ததும் அலங்காரமுமான तत् ऊर्ध्वं पुण्ड्रं அந்த ஊர்த்வ புண்ட்ரமானது भूयः மேன்மேலும் मम विभूत्यै भूयात् எனக்கு (ஐஸ்வர்யத்தின்) விபூதியின் பொருட்டு அமைவதாக.

பகவானுடைய திரு நெற்றியிலே புருவங்களின் நடுவினின்று மேலெழுந்து கர்ப்பூரத்தால் இடப்பெற்று ஓர் அணியாக விளங்குவது ஊர்த்வ புண்ட்ரம்; அதைக் காண்போர்க்கு, அகலகில்லேன் என்று திருமார்பில் நித்ய வாஸஞ் செய்யும் ஸ்ரீதேவியும் மன்மத பாணத்திற்கு இலக்காகி இளைத்து, அக் காமனை ஒடுக்குவதற்காக தன் கடாக்ஷங்களாகிற தாமரை மாலையைச் சாத்தி மகிழ்விக்கும் சிவலிங்கமாகவே தோன்றும். அத்தகைய ஊர்த்வ புண்ட்ரம் நம்முடைய பிறப்பு இறப்பு முதலியவற்றை ஒழித்து நமக்குப் பெருநல மளிப்பதாக.

பகவானுடைய புண்ட்ரம் சிவலிங்க ரூபமாக வர்ணிக்கப் பெற்றதால், அது நமக்கு விபூதியை அளிப்பதாக என்று சொல்லப்பெற்றது.

XLIII. The erect Pundram mark rising upward between the two creeper-like eyebrows of Vishnu (the Lord of

the Worlds) is the crystal Linga of Siva (Īśāna) resplendent with the garland of lotus flowers, *viz.*, the side-glances of Lakshmi who, worn out and afraid of the flight of (flowers) arrows from the sugarcane bow of the terrible God of Love, worships Him (the Vanquisher of Love). It is a weapon, cleaving asunder the dense darkness of birth and death, as well as a decoration. May that erect mark on Vishnu's forehead be for my continued prosperity.

पीठीभूतालकान्ते कृतमकुटमहादेवलिङ्गप्रतिष्ठे
ललाटे नाट्यरङ्गे विकटतरतटे कैटभारेश्चिराय ।
प्रोद्घाट्यैवात्मतन्द्रीप्रकटपटकुटीं प्रस्फुरन्ती स्फुटाङ्गं
पट्वीयं भावनाख्यां चटुलमतिनटी नाटिकां नाटयेन्नः ॥ ४४ ॥

44. பீடீபூதாலகாந்தே க்ருதமகுட-மஹாதேவலிங்க-ப்ரதிஷ்டே
லலாடே நாட்யரங்கே விகடதரதடே கைடபாரேஸ்சிராய |
ப்ரோத்காட்யைவாத்மதந்த்ரீ-ப்ரகடபடகுடீம் ப்ரஸ்புரந்தி
ஸ்புடாங்கம்
பட்வீயம் பாவனாக்யாம் சடுலமதிநடீ நாடிகாம் நாடயேந்நஃ ||

**पीठीभूतालकान्ते** நெற்றியின் ஓரத்திலுள்ள முன்னுச்சி மயிர்ச்சுருளின் நுனிப்பாகத்தை பீடமாகக் கொண்டதும் **कृतमकुटमहादेवलिङ्गप्रतिष्ठे** ப்ரதிஷ்டிக்கப்பெற்ற மஹாதேவ லிங்கம் போன்ற கிரீடத்தைக் கொண்டதுமான **कैटभारेः** கைடபனுக்குப் பகைவரான பகவானுடைய **विकटतरतटे** மிகவும் விசாலமான தளத்தையுடைய **ललाटे नाट्यरङ्गे** நெற்றியாகிய நடனமேடையிலே **आत्मतन्द्रीप्रकटपटकुटीं** தன்னுடைய சோம்பலாகிய அகன்ற திரையை **प्रोद्घाट्य** நன்றாக விலக்கிவிட்டு **स्फुटाङ्गं** தன் அங்கங்கள் நன்றாகத் தோன்றும்படியாக **प्रस्फुरन्ती** விளங்குபவளாய் **नः इयं पट्वी चटुलमतिनटी** திறமை வாய்ந்ததும் சஞ்சலமுமான நமது இந்த புத்தியென்னும் நடனமாது **चिराय** வெகுகாலம் **भावनाख्यां नाटिकां** பாவனை யென்னப்பட்ட நாடகவிசேஷத்தை **नाटयेत्** நடிப்பாளாக.

பகவானுடைய நெற்றி ஒரு அகன்ற நடனமேடை. அதற்கு மேற்புறத்திலே வரிசையாக அமைந்த முன்னுச்சி மயிர் கற்றையை அலங்காராஸனமாகக்கொண்டு பிரதிஷ்டை செய்த பரமசிவனுடைய லிங்கம்போன்றது திருமுடியிலுள்ள கிரீடம். அதன் முன்பு அந்த மேடையிலே நடிக்குந் திறமைவாய்ந்த நம்முடைய புத்தி என்னும் நடனமாது சோம்பல் என்னும் படுதாவை ஒதுக்கிவிட்டுத் தன் அங்கங்கள் அழகாகத் தோன்றுமாறு நின்று பாவனை என்னும் நாடகத்தை ஆடுவாளாக. அதாவது, நம்முடைய தெளிவான புத்தியைக்கொண்டு சோம்பலை நீத்து நாம் முழுத் திறமையுடன் பகவானுடைய நெற்றித்தலத்தைச் சிந்தனை செய்வோமாக.

XLIV. The forehead of Vishnu (Kaitabha's foe) is the broad floor of the dance-hall where the Linga of the great God Siva is installed in the crown on a pedestal of curling locks; this agile mind of ours is an able danseuse who enters the hall, flinging away the heavy veil of her indolence and displaying her limbs in quick movement. May this clever danseuse enact for us the dance-play called Bhavana (continuous contemplation of the Self).

मालालीवालिधाम्नः कुवलयकलिता श्रीपतेः कुन्तलाली
कालिन्द्यारुह्य मूर्ध्नो गलति हरशिरःस्वर्धुनीस्पर्धया नु ।
राहुर्वा याति वक्त्रं सकलशशिकलाभ्रान्तिलोलान्तरात्मा
लोकैरालोक्यते या प्रदिशतु सततं साऽखिलं मङ्गलं नः ॥४५॥

45. மாலாலீவாலிதாம்னஃ குவலயகலிதா ஶ்ரீபதேஃ குந்தலாலீ
காலிந்த்யாருஹ்ய மூர்த்னோ கலதி ஹரஶிரஃஸ்வர்துனீஸ்பர்தயா நு ।
ராஹுர்வா யாதி வக்த்ரம் ஸகலஶஶிகலாப்ராந்திலோலாந்தராத்மா
லோகைராலோக்யதே யா ப்ரதிஶது ஸததம் ஸா'கிலம் மங்களம் நஃ ॥

**अलिधाम्नः श्रीपतेः** வண்டுபோல் காந்தியையுடைய ஸ்ரிய:பதியினுடைய **कुवलयकलिता मालालीइव** கருநெய்தற்பூக்களால் தொகுக்கப்பெற்ற மாலையின் வரிசைபோல விளங்கும் **या** எந்த சுருண்ட திருக் குழற்கற்றை யானது **हरशिरः-स्वर्धनीस्पर्धया** பரமசிவனுடைய தலையிலிருக்கும் தேவகங்கை யோடுள்ள போட்டியாலே **आरुह्य** மேலேறி **मूर्ध्नः** (ஸ்ரீமந் நாராயணனுடைய) தலையிலிருந்து **कालिन्दी** யமுனை **गलति नु** கீழே பாய்கின்றதோ **सकलशशिकलाभ्रान्तिलोलान्तरात्मा** சந்திர கலைகள் எல்லாம் பூர்ணமாகவுள்ளது (அதாவது பூர்ணசந்திர பிம்பம்) என்னும் பிரமத்தாலே தடுமாறும் மனதையுடைய **राहुः** இராகு **वक्त्रं याति वा** (ஸ்ரீமந்நாராயணனுடைய) திருமுக மண்டலத்தை நோக்கிச்செல்கின்றதோ (**इति** என்று) **लोकैः** ஜனங்களால் **आलोक्यते** கருதப்படுகின்றதோ **सा कुन्तलाली** அந்தகுழற்கற்றை **नः** நமக்கு **सततं** இடையறுதளப்பொழுதும் **अखिलं मङ्गलं** எல்லா மங்களங்களையும் **प्रदिशतु** அளிப்பதாக.

எம்பெருமானுடைய திருமுடியிலுள்ள திருக்குழற் கற்றை ஸ்வபாவமாகவே கருநிறமுடையது. அது கரு நெய்தல் மாலையைச் சூட்டியதுபோல் விளங்குகின்றது. உலகிலே பிரவித்தி பெற்றவை கங்கையும் யமுனையும். அவற்றில் கங்கை பரமசிவனுடைய தலையிலே வஸிப்பதைக் கண்டு அஸூயை கொண்டு, யமுனை நாராயணனுடைய தலையில் வாஸஞ்செய்து வருகிறளோ என்னும்படி யிருக் கிறது. அல்லது, எம்பெருமானுடைய அழகிய திருமுக மண்டலத்தை பூர்ண சந்திரனைப் பிரமித்து அதைக்கவ்வும் ஆவலோடு வரும் ராஹுவோ என்று சங்கிக்கும்படியா யிருக்கிறது. அப்படிச் சோபை வாய்ந்த குழற்கற்றை நமக்கு எல்லா நன்மைகளையும் அளிப்பதாக.

XLV. The flowing hair of the dark-hued Vishnu (Lakshmi's Lord) which looks like a garland of blue lilies strung together, is really the Jumna which, competing with the

Ganges, the celestial river on the head of Siva (Hara), has mounted up to Vishnu's head and flows therefrom. Or is it, as is fancied by people, the serpent Rahu gliding towards Vishnu's face with his mind swayed by the delusion that it is the full moon? May that hair of Vishnu's head be for ever bestowing on us consummate bliss.

**सुप्ताकाराः प्रसुप्ते भगवति विबुधैरप्यदृष्टस्वरूपाः**
**व्याप्तव्योमान्तरालास्तरलमणिरुचा रञ्जिताः स्पष्टभासः ।**
**देहच्छायोद्गमाभा रिपुवपुरगरुप्लोषरोषाग्निधूम्याः**
**केशाः केशिद्विषो नो विदधतु विपुलक्लेशपाशप्रणाशम् ॥ ४६ ॥**

46. *ஸுப்தாகாராঃ ப்ரஸுப்தே பகவதி விபுதைரப்யத்ருஷ்ட-ஸ்வரூபாঃ*
*வ்யாப்தவ்யோமாந்தராலாஸ்தரல-மணிருசா ரஞ்ஜிதாঃ ஸ்பஷ்ட-பாஸঃ |*
*தேஹச்சாயோத்கமாபா ரிபுவபுரகருப்லோஷ-ரோஷாக்னிதூம்யாঃ*
*கேஶாঃ கேஶித்விஷோ நோ விததது விபுலக்லேஶ-பாஶ-ப்ரணாஶம் ||*

**भगवति प्रसुप्ते** அந்த பகவான் (யோக) நித்திரை செய்யும்போது **सुप्ताकाराः** தூங்கும் வடிவங்களை யுடையவையும் சடைபோன்றவையும் **विबुधैः अपि** தேவர்களாலும் **अदृष्टस्वरूपाः** காணப்பெறாத ஸ்வரூபங்களை யுடையவையும் **व्याप्तव्योमान्तरालाः** வானத்து இடைவெளி எங்கும் வியாபித்தவையும் **तरलमणिरुचा** (ஆபரணங்களாக அமைந்த) சோதியுடைய மணிகளின் காந்தியாலே **रञ्जिताः** பிரகாசத்தைப் பெற்றவையும் **स्पष्टभासः** நன்கு விளங்குஞ் சோதியை யுடையவையும் **देहच्छायोद्गमाभाः** (எம்பெருமானுடைய) திருமேனியின் சாயலானது மேலெழுந்ததுபோல் விளங்குபவையும் **रिपुवपुरगरुप्लोषरोषाग्निधूम्याः** (ஆச்ரிதர்களுடைய) விரோதிகளின் உடல்களாகிய அகிற்கட்டைகளை எரிக்கும் கோபாக்கினியினின்றும் எழுந்த புகைப்படலங்

களைப்போன்றவையுமான **केशिद्विषः** கேசி விரோதியான ஸ்ரீமந்நாராயணனுடைய **केशाः** திருக்குழல்கள் **नः** நம்முடைய **विपुलक्लेशपाशप्रणाशं विदधतु** மிகப்பெரிய கஷ்டங்களின் தொகையை நன்ருக அழிக்கும் காரியத்தைச் செய்வனவாக.

பகவானுடைய கேசபாசங்களின் கருமையைக் கண்டால் அவை எம்பெருமானுடைய கரிய திருமேனியினின்றும் எழுந்த காந்தியோ என்று தோன்றும். அவை ஆச்ரிதர்களின் விரோதிகளையெல்லாம் சுட்டெரிக்கும் கோபாக்கினியினின்றும் எழுந்த புகைப்படலங்களோ என்றும் சொல்லும்படி இருப்பன; ஜடாமண்டலம்போல் விளங்கும் அவற்றை பகவான் நித்திரை செய்யும்போது, யாராலும் காண இயலாது. ஆகாசத்தை யளாவும் அக் கேசபாசங்கள் சோதி மணிகளின் ஒளிவீசுவதால் நன்ருக விளங்கும். கேசிப் பகைவனுடைய அக் கேசபாசம் நம்முடைய துயரங்கள் அனைத்தையும் தொலைத்து நம்மைக் காப்பதாக.

XLVI. The locks of Vishnu's (Kesi's foe's) hair which slumber and look like matted tresses of Vishnu as He slumbers (remains in yogic thought), are not visible even to the gods, for they pervade the spaces of the heavens; but they are rendered luminous and clear by the brilliance of the excellent gems (worn on Vishnu's head). They look like the outflow of splendour from Vishnu's body and like the dark curls of smoke from the fire of anger fed by the fragrant *agaru* (eaglewood) of the bodies of fallen enemies. May those locks of hair achieve for us the complete destruction of multitudinous sorrow.

यत्र प्रत्युप्तरत्नप्रवरपरिलसद्भूरिरोचिष्प्रतान-
स्फूर्त्या मूर्तिर्मुरारेर्द्युमणिशतचितव्योमवद्दुर्निरीक्ष्या ।
कुर्वत्पारेपयोधि ज्वलदकृशशिखाभास्वदौर्वाग्निशङ्कां
शश्वन्नः शर्म दिश्यात्कलिकलुषतमःपाटनं तत्किरीटम् ॥ ४७ ॥

47. யத்ர ப்ரத்யுப்தரத்னப்ரவர-பரிலஸத்-பூரிரோசிஷ்ப்ரதான-
ஸ்பூர்த்யா மூர்(த்)திர்முராரேர் த்யுமணிஶதசிதவ்யோமவத்-
துர்நிரீக்ஷ்யா |
குர்வத் பாரேபயோதி ஜ்வலதக்ருஶஶிகா-பாஸ்வதௌர்வாக்னி-
ஶங்காம்
ஶஶ்வந்ந: ஶர்ம திஶ்யாத் கலிகலுஷதம:பாடனம் தத் கிரீடம் ||

**यत्र** எந்தக் கிரீடத்திலே **प्रत्युप्त-रत्नप्रवर-परिलसद्भूरिरोचिष्प्रतान-स्फूर्त्या** இழைக்கப்பெற்றவையான சிறந்த ரத்னங்களாலே சுற்றிலும் சோபிக்கின்ற அதிகச் சோதிவாய்ந்த கிரணத்தொகுதிகளின் தோற்றத்தாலே **मुरारेः मूर्तिः** முராரியான மஹாவிஷ்ணுவினுடைய திருமேனியானது **द्युमणिशत-चितव्योमवत्** நூறு (அநேக) சூரியர்களால் வியாபிக்கப்பட்ட ஆகாசத்தைப்போல **दुर्निरीक्ष्या** பார்க்கமுடியாததாய் இருக்குமோ **पारे पयोधि** கடலுக்கு அக்கரையிலே **ज्वलदकृशमहाभास्वदौर्वाग्निशङ्कां** கொழுந்துவிட்டெறிவதாயும் மிகப் பெருஞ் சோதியையுடையதாயும் விளங்கும் வடவைத்தீ என்னும் ஸந்தேஹத்தை **कुर्वत्** உண்டு பண்ணுவதாயும் **कलिकलुषतमः-पाटनं** கலியால் நேரும் தோஷங்களாகிய இருளைத் தகர்ப்பதுமாயுமுள்ள **तत् किरीटं** அந்த கிரீடமானது **नः** நமக்கு **शश्वत्** எப்பொழுதும் **शर्म दद्यात्** சுகத்தையே தருவதாக

ஆகாசவர்ணமுடையதாய் விளங்கும் பகவானுடைய திருமேனி அவருடைய திருமுடியிலே சாத்திய கிரீடத்திலுள்ள மணிகள் சுற்றிலும் ஒளிவீசுவதால், நூற்றுக்கணக்கான சூரியர்கள் ஏககாலத்திலே உதிக்கப்பெற்ற ஆகாசத்தைப்போல காண்பதற்கு அரிதாகின்றது. சமுத்திரத்தின் அக்கரையில் ஜ்வாலைகளை வீசிக்கொண்டு விளங்கும் பெரிய வடவைத்தீயோ என்று ஸந்தேஹிக்கும்படியாக உள்ளது அக்கிரீடம். இவ்விதம் ஜ்வலிக்கும் கிரீடம், கலியால் விளையும் பாபங்களை யெல்லாம் போக்கிப் பேரின்பத்தை நமக்கு அளிப்பதாக.

XLVII. It is impossible to gaze at the form of Vishnu (Mura's foe) when He shines, in the fulness of His splendour, with the rich radiance emanating from the many excellent gems set in His crown, like the sky shining with a hundred suns. And the crown makes one doubt whether it is the great Fire of Badaba that burns bright with huge tongues of flame on the further shore of the (blue) ocean. May that crown which destroys the dark sins of this Iron Age (Kali) bestow happiness on us for ever.

भ्रान्त्वा भ्रान्त्वा यदन्तस्त्रिभुवनगुरुरप्यब्दकोटीरनेकाः
गन्तुं नान्तं समर्थो भ्रमर इव पुनर्नाभिनालीकनालात् ।
उन्मज्जन्नूर्जितश्रीस्त्रिभुवनमपरं निर्ममे तत्सदृक्षं
देहाम्भोधिः स देयान्निरवधिरमृतं दैत्यविद्वेषिणो नः ॥ ४८ ॥

48. ப்ராந்த்வா ப்ராந்த்வா யதந்தஸ்த்ரிபுவனகுருரப்யப்த-கோடீரநேகாঃ
கந்தும் நாந்தம் ஸமர்(த்)தோ ப்ரமர இவ புனர் நாபிநாலீகநாலாத் |
உன்மஜ்ஜன்னூர்ஜிதஸ்ரீஸ்த்ரிபுவனமபரம் நிர்மமே தத்ஸத்ருக்ஷம்
தேஹாம்போதிঃ ஸ தேயாந் நிரவதிரம்ருதம் தைத்யவித்வேஷி-
ணோ நঃ ||

त्रिभुवनगुरुःअपि மூவுலகங்களுக்கும் தந்தையான பிரமனும் यदन्तः எந்த பகவானுடைய திருமேனிக்குள் अनेकाः अब्दकोटीः பலகோடி ஆண்டுகள் भ्रान्त्वा भ्रान्त्वा திரிந்து திரிந்து अन्तं गन्तुं எல்லைகாண்பதற்கு न समर्थः திறமையற்றவனாகி पुनः மீண்டும் ऊर्जितश्रीः (பகவதனுக்ரஹத்தால்) நிலைபெற்ற மனத்தெளிவுடையவனாகி नाभिनालीकनालात् திருவுந்தித்தாமரையின் தண்டின்வழியே भ्रमर इव ஒரு வண்டைப்போல उन्मज्जन् வெளிப்போந்து तत्सदृक्षं (தான் திரிந்த) அந்த மூவுலகங்களுக்கும் ஒப்பான अपरं त्रिभुवनं வேறொரு மூவுலகத்தை निर्ममे படைத்தானோ, दैत्यविद्वेषिणः அரக்கர்களை வெறுப்பவரான மஹாவிஷ்ணுவினுடைய सः निरवधिः देहाम्भोधिः அந்த எல்லையற்ற திருமேனியாகிய கடல் नः நமக்கு अमृतं மோக்ஷமாகிய அமிர்தத்தை देयात् அளிப்பதாக.

பாதாதிகேசாந்தம் வர்ணித்தபிறகு, இச்சுலோகத்தால், பொதுவாக பகவானுடைய திருமேனியைப்பற்றிப் பேசுகிறார். எந்தத்திருவுருவத்திலே பலகோடி வருஷங்கள் அலைந்து திரிந்தும் வழி திகைத்து ஒரு முடிவு காணாத பிரமன் பகவதனுக்ரஹத்தால் மதிமயக்கம் நீங்கப்பெற்று, மீண்டும் தாமரைத் தண்டின்வழியே வண்டு வெளிவருவது போல தாமரைப் பூவிலே வந்து, தான் பகவானுடைய திருமேனிக்குள்ளே கண்டபடியே மூவுலகங்களையும் வெளிப் படப் படைக்கிறானோ, அந்த எல்லைகாணாக் கடலைப்போன்ற அவனுடைய திருவுருவே எனக்கு அமிர்தம் போன்ற மோக்ஷத்தை யருளுவதாக.

XLVIII. Vishnu (who hates the Asuras)—His body is an ocean-stream. Inside that ocean, Brahma, though lord of the three worlds, wandered and wandered for many crores of years and was not able to reach the shore (the Ocean's end). Then, (by His grace) he dived like a bee, and rose up through the stem of His navel-lotus; and, with his mind now steadfast, he created another triad of worlds in the image of what he saw (inside Vishnu's body). May that Ocean of His body give us the boundless bliss of everlasting Life.

**मत्स्यः कूर्मो वराहो नरहरिणपतिर्वामनो जामदग्न्यः**
**काकुत्स्थः कंसघाती मनसिजविजयी यश्च कल्किर्भविष्यन् ।**
**विष्णोरंशावतारा भुवनहितकरा धर्मसंस्थापनार्थाः**
**पायासुर्मां त एते गुरुतरकरुणाभारखिन्नाशया ये ॥ ४९ ॥**

49. மத்ஸ்யஃ கூர்மோ வராஹோ நரஹரிணபதிர் வாமனோ ஜாமதக்ந்யஃ
காகுத்ஸ்தஃ கம்ஸகாதீ மனஸிஜவிஜயீ யஶ்ச கல்கிர்பவிஷ்யன் |
விஷ்ணோரம்ஶாவதாரா புவனஹிதகரா தர்மஸம்ஸ்தாபனார்(த்)தாஃ
பாயாஸுர்மாம் த ஏதே குருதரகருணா-பாரகின்னாஶயா யே ||

**मत्स्यः कूर्मः वराहः नरहरिणपतिः वामनः जामदग्न्यः काकुत्स्थः कंसघाती मनसिजविजयी** மீன், ஆமை, வராஹம், நரசிங்கம், வாமனன், ஜமதக்னியின் மகனான பரசுராமன்,

கருத்ஸ்த வமிசத்திலே தோன்றிய ராமன், கம்ஸனைக் கொன்ற ஸ்ரீ கிருஷ்ணன், மன்மதனை வென்றவன் (புத்தன்) என்றும் **यः भविष्यन् कल्किः च** இனி வருவோனாகிய கல்கி என்றும் விளங்கும் **ये** எந்த அவதாரங்கள் **धर्मसंस्थापनार्थाः** தருமத்தை நிலைநிறுத்துவதையே கருத்தாகக் கொண்டவை யும் **भुवनहितकराः** உலகங்களுக்கு ஹிதத்தைச் செய்பவையு மான **विष्णोः** மஹா விஷ்ணுவின் **अंशावताराः** அமிசங்களான அவதாரங்களோ **गुरुतरकरुणाभारखिन्नाशयाः** மிகவும் அதிக மான கருணையின் கனத்தினாலே இளகிய மனதையுடையவை யான **ते एते** அந்த இந்த அவதாரங்கள் **मां** என்னை **पायासुः** பாதுகாப்பவையாக.

விஷ்ணுவின் அமிசாவதாரங்களில் ஒவ்வொன்றும் உலகோரிடம் கருணைகொண்டு, 'அடியார்க்கென் செய்வது' என்றே ஏங்கிய மனத்தை யுடையதாகி அவர்களுக்கு நன்மை பயப்பதற்காகவும் தர்மத்தை நிலைபெறச் செய்வ தற்காகவும் அமைந்தது; ஒன்பது அவதார காலங்களுக்குப் பிற்பட்டும் பத்தாவது அவதாரத்திற்கு முற்பட்டுமுள்ள என்னையும் அவை ஒருங்கே ரக்ஷிப்பனவாக.

XLIX. The Fish, the Tortoise, the Man-Lion, the Dwarf, Parasu-Rama (the Son of Jamadagni), Sri Rama (of the Kakustha dynasty), Sri Krishna (the Destroyer of Kamsa), the Lord Buddha (who vanquished the God of Love), and He, the coming Kalki,—these partial Avataras of Vishnu are for the good of the worlds and for the firm establishment of Dharma; and their hearts are laden with excessive compassion. May they save me.

**यस्माद्वाचो निवृत्ताः सममपि मनसा लक्षणामीक्षमाणाः**
**स्वार्थालाभात्परार्थव्यपगमकथनश्लाघिनो वेदवादाः ।**
**नित्यानन्दं स्वसंविन्निरवधि विमलस्वान्तसंक्रान्तबिम्ब-**
**च्छायापत्त्याऽपि नित्यं सुखयति यमिनो यत्तदव्यान्महो**
**नः ॥ ५० ॥**

50. யஸ்மாத் வாசோ நிவ்ருத்தா: ஸமமபி மனஸா லக்ஷணாமீக்ஷமாணா: ஸ்வார்(த்)தாலாபாத் பரார்(த்)தவ்யபகமகதன-ஶ்லாகினோ வேத-வாதா: |
நித்யானந்தம் ஸ்வஸம்வின்-நிரவதி விமலஸ்வாந்தஸங்க்ராந்தபிம்ப-ச்சாயாபத்த்யா'பி நித்யம் ஸுகயதி யமினோ யத்ததவ்யான்மஹோ ந: ||

**यस्मात्** எந்த பிரும்மம் என்னும் சோதியினின்றும் **मनसा अपि समं** மனதுடனுங்கூட **वाचः** சொற்கள் **निवृत्ताः** மீண்டனவோ, **वेदवादाः** வேதவாக்கியங்கள் **स्वार्थलाभात्** முக்கியார்த்தத்தைப் பெருமையால் **लक्षणाम् ईक्षमाणाः** லக்ஷணையை நாடுகின்றவையாய் **परार्थव्यपगमकथनश्लाघिनः** வேறு பொருள்களை மறுத்துச் சொல்வதாலேயே பெருமை கொண்டனவோ, **नित्यानन्दं** நித்யமாயும் ஆனந்தமாயும் **स्वसंवित्** ஸ்வயம் பிரகாசமாயும் **निरवधि** அளவு கடந்ததாயு முள்ள **यत्** எந்தச் சோதி **यमिनः** தன்னைத் தியானிப்பவர்களை **विमल-स्वान्त-संक्रान्त-बिम्बच्छायापत्त्या अपि** (தங்கள்) நிர்மலமான மனதிலே பிரதிபலிக்கும் (பகவானுடைய) திருமேனியின் ஒளியைப் பெறச் செய்வதாலேயே **नित्यं सुखयति** எப்போதும் சுகப்படுத்துகிறதோ **तत् महः** அந்தச் சோதி **नः अव्यात्** நம்மைக் காப்பதாக.

பகவானுடைய குணங்களையும் ஸ்வரூபத்தையும் வர்ணிக்கப் புகுந்தது வேதம். அவனது ஆனந்த குணத்தை அளவிட முயன்ற ஆனந்தவல்லியிலே, மனதுடன் வாக்குகளும் எல்லைகாணமலே திரும்பி விட்டன. அநிர்வசனீயமான பிரும்ம ஸ்வரூபத்தை உணர்த்தப் புகுந்த ஸத்யம், ஞானம், அனந்தம் என்னும் பதங்களும் லக்ஷணையாலே, 'பிரும்மம் இதர வஸ்துக்களினின்றும் வேறுபட்டது' என்பதையே உணர்த்திப் போந்தன. தன்னை உபாஸித்தவர்களுக்கு, உபாஸனை பலத்தால் மலங்கள் நீங்கப்பெற்றுக் கண்ணாடிபோல் விளங்கும் அவர்களது மனதிலே, ஸ்வயம் பிரகாசமாயும் நித்தியானந்தமாயும் அளவிலடங்காததாயு

முள்ள தன் ஸ்வரூபத்தைப் பதிய வைத்து ப்ரஹ்ம ஸாம்யத்தை யளிக்கும் அப் பரஞ்சோதி நம்மைக் காப்பதாக.

L. May that great Splendour save us, whence words turn back (without reaching the goal) along with the mind; the Vedic passages, not achieving their purpose and looking out for Its characteristics (Lakshanas), pride themselves merely by boasting of their rejection of other things as different from It. That Illimitable Splendour is Eternity, Bliss (Ananda) and Self-knowledge (Sva-samvid); and It causes continuous delight to the devotees who contemplate It, by letting them have Its image in (the mirror of) their unblemished hearts.

आपादादा च शीर्षाद्वपुरिदमनघं वैष्णवं यः स्वचित्ते
धत्ते नित्यं निरस्ताखिलकलिकलुषे संततान्तःप्रमोदः ।
जुह्वज्जिह्वाकृशानौ हरिचरितहविः स्तोत्रमन्त्रानुपाठैः
तत्पादाम्भोरुहाभ्यां सततमपि नमस्कुर्महे निर्मलाभ्याम् ॥ ५१

51. ஆபாதாதா ச ஶீர்ஷாத் வபுரிதமனகம் வைஷ்ணவம் யஃ ஸ்வசித்தே
தத்தே நித்யம் நிரஸ்தாகிலகலிகலுஷே ஸந்ததாந்தஃ ப்ரமோதஃ |
ஜுஹ்வஜ்ஜிஹ்வாக்ருஶானௌ ஹரிசரிதஹவிஃ ஸ்தோத்ர-மந்த்-
ரானுபாடைஃ
தத்பாதாம்போருஹாப்யாம் ஸததமபி நமஸ்குர்மஹே நிர்மலா-
ப்யாம் ||

**स्तोत्रमन्त्रानुपाठैः** ஸ்தோத்திரங்களாகிய மந்திர படனங்களாலே **जिह्वाकृशानौ** நாக்கு என்னும் அக்னியிலே **हरिचरितहविः** ஸ்ரீ ஹரியின் சரிதமென்னும் ஹவிஸை **जुह्वत्** ஹோமஞ் செய்கிறவனாய் **आपादात्** திருவடியிலே தொடங்கி **आचशीर्षात्** திருமுடிவரையிலுமுள்ள **अनघम् इदं वैष्णवं वपुः** மாசற்ற இந்த விஷ்ணுவின் திருமேனியை **यः** எவன் **संततान्तःप्रमोदः** நிரம்பிய மனக்களிப்புடையவனாய் **निरस्ताखिलकलिकलुषे** கலியால் உண்டாகும் எல்லாப் பாபங்களையும் ஒழித்த **स्वचित्ते** தன் சித்தத்திலே **नित्यं धत्ते** எப்போதும் வைத்துக்கொண்டு தியா

னம் செய்கிருனே **निर्मलाभ्यां तत्पादाम्भोरुहाभ्यां** பரிசுத்த மான அவனுடைய பாதகமலங்கள் இரண்டிற்கும் **सततम् अपि** எப்பொழுதுமே **नमस्कुर्महे** நமஸ்காரஞ் செய்துகொண்டிருக்கிறோம்.

தியான யஜ்ஞம் என்பது, மனதிலே பரமபுருஷனுடைய மூர்த்தியை பாதாதிகேசமாக அமைத்துக்கொண்டு நாக்கு என்னும் ஹோமாக்னியிலே ஸ்துதிகள் என்னும் மந்திரங்களைக்கொண்டு பரம புருஷனுடைய செய்திகள் என்னும் ஹவிஸை ஆஹுதி செய்வதாகும். இவ்வாறு இடைவிடாது தியான யஜ்ஞம் செய்யும் மஹானுபாவனுடைய தூய மலர்ப் பாதங்களை நாம் இடைவிடாது தொழுகின்றோம்.

LI. If in his inner heart whence all dark sins are driven out and destroyed, any person retains for ever, with ever lasting joy of mind, this perfect picture of Vishnu's form from foot to head and offers as oblation the story of Vishnu's (Hari's) deeds in the sacrificial fire of his tongue accompanied with the recitation of this hymn (*Stotra*) as *Mantra*—at the flawless lotus-feet of that person also, we bow down in endless adoration.

**मोदात्पादादिकेशस्तुतिमिति रचितां कीर्तयित्वा त्रिधाम्नः**
**पादाब्जद्वन्द्वसेवासमयनतमतिर्मस्तकेनानमेद्यः ।**
**उन्मुच्यैवात्मनैनोनिचयकवचकं पञ्चतामेत्य भानोः**
**बिम्बान्तर्गोचरं स प्रविशति परमानन्दमात्मस्वरूपम् ॥ ५२ ॥**

52. மோதாத் பாதாதிகேஶஸ்துதிமிதிரசிதாம் கீர்(த்)தயித்வா த்ரிதாம்நஃ
பாதாப்ஜத்வந்த்வ-ஸேவாஸமயநத-மதிர் மஸ்தகேநாநமேத் யஃ |
உன்முச்யைவாத்மனைநோ-நிசயகவசகம் பஞ்சதாமேத்ய பானோஃ
பிம்பாந்தர்கோசரம் ஸ ப்ரவிஶதி பரமானந்தமாத்மஸ்வரூபம் ||

**इति** இவ்வாறு (பகவானைப் பாதாதிகேசமாக அனுபவித்த ஆனந்தத்தால்) **रचितां पादादिकेशस्तुतिं** இயற்றப் பெற்ற திருப்பாதாதிகேச ஸ்துதியை **मोदात्** ஆனந்தத்தால்

**कीर्तयित्वा** பாடிக்கொண்டு **त्रिधाम्नः** (விண் மலை கடல் என்னும்) மூன்று இடங்களிலும் அமர்ந்திருக்கும் ஸ்ரீமந்நாராயணனுடைய **पादाब्जद्वन्द्वसेवासमयनतमतिः** பாதக்கமலங்கள் இரண்டிலும் தொழுகின்ற சமயத்திலே படிந்த புத்தியுடையவனாய் **यः** எவன் **मस्तकेन** தலையாலே **आनमेत्** வணங்குவானோ **सः** அவன் **आत्मना** தேகத்தோடு **एनोनिचयकवचकं** பாபமயமான கவசத்தையும் **उन्मुच्य** கழற்றி யெறிந்து **पञ्चतास् एत्य** மரணமடைந்து **भानोः बिम्बान्तर्गोचरं** சூரிய மண்டலத்தின் ஊடேயுள்ள **परमानन्दम् आत्मस्वरूपं** உயர்வற வுயர்நலமான பரமாத்ம ஸ்வரூபத்தை **प्रविशति** அடைகிறான்.

பலஶ்ருதி—ஆபாதகேசம் பகவானை அனுபவித்து அவ்வனுபவ ஜநித பரிவாஹ ரூபமாக அமைந்த பாதாதிகேச ஸ்தோத்ரத்தை ஆனந்தமாகப் பாடிப் பணிந்த மனதோடு பகவானுடைய பாத கமலங்களிலே தலை வணங்குகிறவன், தான் சுமக்கும் பாபச் சுமையாகிய கவசத்தைக் கழற்றி யெறிந்துவிட்டு, இந்த பஞ்சபூத மயமான உடலையும் விட்டு, சூரிய மண்டலத்திலுள்ள பரமானந்த மயமான ஆத்ம ஸ்வரூபத்தைப் பெறுகிறான்.

LII. Whoever in sheer joy chants this hymn of Vishnu (who has three places, the Heaven, the Ocean and the Mountain, as His abode) entitled *Padadikesa-Stuti* and with a humble mind, bends his head low worshipping the twin-lotuses of His feet—he throws off the cloak of heavy sin behind him and with his body dissolved into the five elements, he attains, inside the orb of the Sun, the Supreme Bliss which is the Self (the Atman).

॥ इति श्रीविष्णुपादादिकेशान्तस्तोत्रं संपूर्णम् ॥

ஸ்ரீ விஷ்ணு பாதாதிகேசாந்த ஸ்தோத்ரம் முற்றிற்று.

Thus is completed *Sri Vishnu-Padadi-kesanta-Stotra.*

சுபமஸ்து

ஓம் தத் ஸத்

The Liberty Press, Madras.

ஸ்ரீ சந்த்ர மௌளீச்வராய நம:

## ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தில் வெளிவரும் புத்தகங்கள்

ஒவ்வொரு புத்தகத்திலும் பல படங்கள் உள்ளன. ரூ. அ.

*1. ஸ்ரீ மூகபஞ்ச சதீ — ஸ்ரீ மூக கவி அருளிச் செய்தது. 500 ஶ்லோகங்கள் கொண்டது. தேவநாகரி மூலமும் தமிழ் மொழி பெயர்ப்பும். (2-ஆம் பதிப்பு). ... 1—4

2. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் — ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் அருளிய பாஷ்யத்திற்குத் தமிழ் அனுவாதம் ஸ்ரீ வே. நாராயணன் எழுதியது. (2-ஆம் பதிப்பு). ... 1—4

3 ஸ்ரீ பஜகோவிந்தம் — ஸம்ஸ்க்ருத மூலமும் ஸ்ரீ ஏ. எஸ். நடராஜ ஐயர், பி.ஏ., எம்.எல்., எழுதிய தமிழ் அனுவாதமும். 0-2½

*4. ஸ்ரீ ஶ்யாமளா தண்டகம் — இதை இயற்றியவர் ஸ்ரீ மஹா கவி காளிதாஸன்: ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் அனுவாதமும் 0—6

5. ஸ்ரீ முகுந்தமாலா — ஸ்ரீ குலசேகரப் பெருமாள் அருளியது. ஸாஹிதீ வல்லப ஸ்ரீ T. ஸுந்தராசார்ய ஸ்வாமிகள், பி. ஏ., பி. எல்., எழுதிய விரிவுரையுடன் கூடியது. ... 0—5

6. ஸ்ரீ ப்ரச்நோத்தர ரத்ந மாலிகா — ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் இயற்றியதை ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் தமிழில் உபதேசித்தது. ... ... ... 0-2½

7. ஸ்ரீ விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம் — ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் இயற்றியது. தமிழ் ஆங்கில அனுவாதங்களுடன் கூடியது. ... ... ... 0—8

*8. ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ரர்கள் அருளிய சிவ மானஸிக பூஜா, கீர்த்தனங்கள், ஆத்ம வித்யா விலாஸ: என்னும் நூல்கள்: ஸ்ரீ வே. நாராயணன், எழுதிய தமிழ் ஆங்கில அனுவாதங்களுடன் கூடியவை. (2-ஆம் பதிப்பு). ... 0-10

9. ஸ்ரீ தீனுக்ரந்தனம் என்னும் ஸ்ரீ காசீ விச்வேச்வர ஸ்தோத்ரம் — ஸ்ரீ லோஷ்ட தேவர் ஸம்ஸ்க்ருதத்தில் இயற்றிய சுலோகங்களும், ஸ்ரீ. ஏ. எஸ். நடராஜ ஐயர், பி.ஏ., எம்.எல்., எழுதிய தமிழ் அனுவாதமும் கூடியது. ... 0—8

*10. ஸ்ரீ சாந்தி விலாஸம் — ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் இயற்றிய ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும் ஸ்ரீ Y. மகாலிங்க சாஸ்திரியார், எம்.ஏ., பி.எல்., எழுதிய தமிழ் அனுவாதமும் கூடியது ... 0—6

*11. ஸ்ரீ ஆனந்த ஸாகரஸ்தவம்—ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் இயற்றிய ஸம்ஸ்க்ருத ஸ்தோத்திரமும் ஸ்ரீ Y. மகாலிங்க சாஸ்திரியார், M.A., B.L., எழுதிய தமிழ், ஆங்கில அனுவாதங்களுடன் 0-10

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம், கும்பகோணம்.

* அச்சில் உள்ளது, சிக்கிரம் வெளிவரும்.